உ

ஸ்ரீசற்குருவேநம:

# பஞ்சதசப்பிரகரணம்.

வித்தியாரண்ணிய சுவாமிகள் சமஸ்கிருதத்தில்

அருளிச்செய்தபடி

தமிழில்மொழிபெயர்த்தது.

---

இஃது.

சென்னை சிந்தாதிரிப்பேட்டை

**வீராசாமிநாயுடு அவர்களா**

பிழையறப்பரிசோதித்து

திரிசிரபுரம்,

புஸ்தகஷாப்பு

**காமாக்ஷிபிள்ளை**

**பெரியசாமிபிள்ளை**

இவர்கள்கேட்டுக்கொண்டபடி

---

ஷை யூர்

புஸ்தகஷாப்பு

**தி. சபாபதிபிள்ளை**

அவர்களால்

சென்னை

ஸ்ரீமட்டுவார்குழலம்பாள் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

௲அ௭௭ஆ ஸெப்டம்பர்



## விளம்பரம்.

ல் யாவருக்கும் தெரிவிப்பதுயாதெனில் ஸ்ரீ தக்ஷிணகயி
ாமலை, திருச்சிரபுரம், திருச்சிறுப்பள்ளியென்னும் பலநாம
ஸ்ரீ திரிசிராமலை புராணம் என்னும் செவ்வந்திபுராணம்
அச்சி ாலயம் நூல்கிடைக்காமல் மறைவுபட்டிருந்தது
ஷை யூர் மாதருபூதேஸ்வரர் இடப்பாகம்பெற்ற
யம்மனென்றும் ஸ்ரீமட்டுவார் குழலம்பாளம்மனை
மை இத்த ம்பெற்ற ஷை அம்மனுடைய அனுக்கிரகத்தால்சென்
னை சிந்தாதிரிப்பேட்டை சாமிநாய்க்கர்வீதி (கூஉ) வது நெம்பர்வீட்டில்
ஷை ஸ்ரீ மட்டுவார் குழலம்பாளம்மன்பேரால் அச்சுக்கூடம் வைத்து
விருத்தியுண்டாகி வருகிற இவ்வச்சுக்கூடத்தலைவராயும், ஷை யூரிலும்
தஞ்சாவூர் கருவூரிலும் புதுக்கோட்டையிலும் புஸ்தகக்கடை வைத்திருக்
கும் தி. சபாபதிபிள்ளையவர்களால் வித்துவாம்சர்களைக்கொண்டு பிழை
களைந் திருத்தி நல்லகாகிதமெழுத்துக்களுடன் ஷை செவ்வந்திபுராண
மும சைவாகம மிருபத்தெட்டினுள் - உஅ - வது சந்தாந சர்வோத்த
மத்தின் உபதேசம் பதினொன்றினுள் - அ - வது சிவதருமோத்திர
மும் திருமூலர் திருமந்திர மூவாயிரமும் அச்சிட்டிருப்பதால் அதுவு
ம் ம-ா-ா-ஸ்ரீ, ஆறுமுகநாவலரவர்களாலும் ம-ா-ா-ஸ்ரீ, புஷ்பரத செ
ட்டியாரவர்களாலும் அச்சிட்டபுஸ்தகங்களும் மற்றபலவிததமிழ் தெலு
ங்கு கிரந்தம் பாடசாலைக்குபயோகமுள்ள புஸ்தகங்களும் ஷை யூர்களில்
ஷை யார கடைகளில்விலைசகாயமாய் வாங்கிக்கொள்ளலாம்.

இப்படிக்கு.

தி, சபாபதிபிள்ளை - தம்பி,
ஸ்ரீ வெங்கிடாசலம்பிள்ளை,
மருமகன் ஸ்ரீ சுப்பராயப்பிள்ளை..

ஊழி - ஆ-ஷ

௨

கடவுள் துணை.

# பஞ்சதசப்பிரகரணம்.

முதலாவது

## சித்திரதீபிகை.

வித்தியாரண்ணியஸ்வாமிகள் லோகானுக்கிரக நிமித்தியமாகசகல வேதாந்தத்தினுடைய பொருள்களெல்லாம் மனதிலேசேகரித்துக்கொண்டுசகலவேதாந்தமெல்லாம் அதிகரிக்கமாட்டாதபேருக்குமெளிதாகவேதாந்தத்தினுடைய உண்மைப்பொருள்களைக்கண்டு அனுபவித்து மோட்சமடையத்தக்கதாக சகலவேதாந்தசம்மதப்படிக்குத் தம்முடைய மனதிலேயிருக்கின்ற பிரமானுபவத்தைப் பஞ்சதசப்பிரகரணத்தினாலேவெளிப்பண்ணவேணுமென்று பதினைந்துபிரகரணத்துக்குள் முந்தினபிரகரணத்தினாலே அத்தியாரோபம் அபவாதமென்கிற இரண்டுநியாயத்தையுந்தழுவிக்கொண்டு பரமாத்மாவின் இடத்திலே ஆரோபிக்கப்பட்டிருக்கின்ற செகத்தினுடையலட்சணம்சித்திரமேயல்லாமல்உண்மையல்லவென்கின்றதைச்சித்திரபட திருஷ்டாந்த முன்னிலையாகவெளிப்பண்ணினபடிப்படவையினிடத்திலேசித்திரம் ஆரோபிக்கப்பட்டாப்போலே பரமாத்மாவாகவிருக்கின்றதன்னுடையஸ்வரூபத்திலேசிவன்செகத்துஈஸ்வரனென்னப்பட்டசித்திரம் ஆரோபிக்கப்பட்டதென்றறிக.

சங்கை சித்திரப்படந்தானே தானாகவிருந்தால் வெளுத்தப்படமென்றும் கஞ்சிபூசினால் பசைப்படமென்று கரியால்சித்திரம் அச்சுக்கட்டினால் லாஞ்சனப்படமென்றும் வர்ணம் அடைத்துத்தீர்ந்தால் ரஞ்சிகப்படமென்றுங் கண்டாப்போலே பரமாத்மாவிற்கு நாலுவித அவஸ்தை ஏது அதற்குஉபாதியேதென்னில்.

உத்தரம் பரமாத்மா ஒருபாதியுமற்றுத் தாமாயிருக்கும்போதுசித்தென்னும், மாயையினுடனேகூடினால் அந்தரியாமியென்றும், சமஷ்டிசூட்சம பூதசூட்சம சரீரத்துடனேகூடினால் இரணியகெர்ப்பமென்றும், சமஷ்டிஸ்தூல பூதஸ்தூலதேகத்துடனேகூடினால் விராட்புருஷனென்றும் சொல்லப்படும்.

சங்கை பரமாத்மாவே சித்திரப்படமானால் அதைப் பற்றியிருக்கின்ற சித்திரபேதங்களேதென்னில்.

உ—ம் பிரமாதிஸ்தம்பபரியந்தம் உத்தமம்மத்திமம் அதர்மமாய்க்காண்பிக்கின்ற பிராணிகளும் மலை ஆறுகோபுரமுதலான சடங்களும் சுபாவ சைதன்னியத்தினிடத்திலே மாயையாகின்றவானத்தினால் கற்பிக்கப்பட்டசித்திரமேயாம்

ச—கை இதுவேசித்திரமானால்சேதனம் அசேதனமென்று மிருவகுப்பாயிருக்க கணக்கில்லையேயென்னில்

உ—ம் படத்தில் ஆபாசமெழுதியிருக்கின்றாப்போல சைதன்னியசித்திரத்திலே பிராணிகள்மாத்திரத்திற்குச சிதாபாசர்கற்பிக்கப்பட்டார்கள் இவர்கள் சாட்சைதன்னியமுமல்ல

ச—கை மலைஆறுகோபுரம் முதலானவைகட்கு வஸ்திராபாசத்வமென் இல்லையென்னில்

உ—ம் சித்திரத்திற் பருவதமுதலானவைகட்குவஸ்திராபாசந் தேவையற்றதுபோலே சிருஷ்டியிலே யகப்பட்ட மண்முதலானவைகட்குசிதாபாசத்வந்தேவையில்லை

ச—கை பிராணிகள்மாத்திரத்திற் சிதாபாசா கற்பனைக்குப் பிரயோசனமேதென்னில்

உ—ம் நால்வகைசரீரங்களை யடைந்து சனனமரணாதி சம்சாரமிருவகிக்கின்றதே பிரயோசனமாம்

ச—கை இப்படிசிதாபாசனுக்கே சம்சாரமானால் சகலவாதிகளும்வெளிகரும் ஆத்மாவிற்கே சம்சாரமென்று சொல்லக்காரியமேதென்னில்

உ—ம ஆபாசப்புடவையின் வர்ணத்தைஅதிஸ்டானப் புடவையின்வர்ணமாகச் சொல்லுகின்றாப்போலே ஆபாசன்சம்சாரத்தை அதிஸ்டானத்திலே சுமத்துகின்றதற்கு அஞ்ஞானமேகாரணம்

ச—கை அஞ்ஞானத்திற்கு லட்சணமேதென்னில்

உ—ம் தன்னிடத்திற்கற்பிக்கப்பட்ட சிதாபாசனையும் அவன்சம்சாரத்தையும் தன்னுடைய சுபாவமென்கிற மயக்கமேஅஞ்ஞானம்

ச—கை அந்த அஞ்ஞானத்தைபோக்குதற்கு உபாயமேதென்னில்

உ—ம் தனக்குஒருக்காலும் சம்சாரமில்லை சம்சாரமும்சம்சாரியும் கற்பிதமென்கின்றவிவேகமே அஞ்ஞானத்தைத்தள்ளுதற்கு உபாயம்

ச—கை அந்தஉபாயம் எதுசெய்தால்வருமென்னில்

உ—ம சீவன்செகத்து பரமாத்மாக்களை குருசன்னிதானத்தில் பலப்பட விசாரிக்கவேண்டும் அப்போதுவிவேகமவரும்

ச—கை மோட்சஅவத்தையில் பலமாகமிஞ்சிப்போகின்ற பரமாத்மாவையே விசாரிக்கவேண்டு மல்லாமல் வந்தியா புத்திரனைப்போலிருக்கின்ற சீவனையும் செகத்தையும் விசாரிக்கக்காரியமேதென்னில்

# பஞ்சதசப்பிரகரணம்

உ—ம் ஏகீபாவமாயிருக்கின்ற பரமாத்மாவினிடத்திலே ஒருவிசாரமுமில்லை விசாரமெல்லாம் சீவன் செகத்துக்களிலேதானே உண்மையாக விசாரிக்கில் இருவகையும் வாதிக்கப்பட்டவுடனே பரமாத்மாவே தானாகமிஞ்சும்

ச—கை விசாரித்தஞானிகட்கு சீவன் செகத்துவாதிக்கப்பட்டால் திரும்பவும் வியவகாரந்தோன்றுவானேனென்னில்

உ—ம் சுழுத்தியில் சீவன்செகத்துத்தோற்றமற்றிருக்கையினாலும் இது முத்தியல்லாமலிருக்கையில் தோற்றமற்போகின்றதுவானதையல்ல இந்தஇருவகையும் மித்தையென்கிற நிச்சயமே[illegible]

ச—கை இந்த இருவகையுந்தோற்றுமானாலும் பரமாத்மாமாத்திரமிஞ்சப் போகின்றது எப்படியென்னில்

உ—ம் பரமாத்மாமாத்திரம் அழிவற்ற உண்மைப்பொருளென்கின்ற நிச்சயமே மிஞ்சுகின்றது செகத்துமறைகின்றதல்ல செகத்தில்லாதிருந்தால் சீவன்முத்திகூடாது

ச—கை இந்தமூவகையும் எத்தனைகாலம்விசாரிக்கவேண்டுமென்னில்

உ—ம் விசாரத்தினால்வந்த ஞானம் பரோட்சஞானமென்றும் அபரோட்சஞானமென்றும் இருவகையாகவிருக்கும் இதில்அபரோட்சஞானம்வந்தால்விசாரத்திற்குமுடிவு

ச—கை இந்த இருவகைஞானத்திற்கும் லட்சணமேதென்னில்

உ—ம் பிரமமொன்றுண்டென்கிறது பரோட்சஞானம் நானே அந்தப்பிரமமென்றதுணிவு அபரோட்சஞானம்

ச—கை இந்தபரோட்சஞானத்தை வருவிக்கின்றவிசாரமேதென்னில்

உ—ம் கடாகாயம் மகாகாயம் சலாகாயம் மேகாகாயம்போல கூடஸ்தனையும் பிரமத்தையும் சீவனையும் ஈஸ்வரனையும் பகுத்தறிகின்றதே விசாரம்

ச—கை கடாகாயமும் மகாகாயமுங் கண்டோம் சலாகாயத்திற்கும் மேகாகாயத்திற்கும் லட்சணமேதென்னில்

உ—ம் கடசலத்திற் பிரத்தியட்சமாக நட்சத்திரங்களுடனே காண்பிக்கின்ற ஆகாயம்சலாகாயம் மகாகாயந்தங்கின மேகசலத்திலே அனுமானத்தினால் கண்டபிரதிபிம்பமேமேகாகாயம்

ச—கை கூடஸ்தர்முதலான நாலுஞ்சதன்மியத்தையும் பகுத்துக்காட்டவேண்டுமென்னில்

உ—ம் நிருவிகாரமாகவிருக்கின்ற அதிஷ்டானசைதன்னியமே சரீரத்தில் வளையப்பட்டது கூடஸ்தனென்றும்மற்றதுபிரமமென்றும கூடஸ்தரிடத்திலேகற்பிதமான அந்தக்கரணப் பிரதிவிம்பன்சீவனென்றும்பிரமத்திற்கற்பிதமான மாயாபிரதிவிம்பன் ஈஸ்வரனென்றுஞ் சொல்லப்படும்

ச—கை சரீரத்திலே நானென்று விவகரிக்கிற சீவனைத்தவிர வேறே கூடஸ்தர் எங்கேயென்னில்

உ—ம் கடாகாசத்தினாலே மகாகாசம் மறைபட்டாற் போலச் சீவனாலே கூடஸ்தருமறைபட்டு இரண்டுமொன்றாகத் தோற்றுகின்றது

ச—கை இந்தச்சீவன்கூடஸ்தரை யேன்பகுத்தறியவில்லையென்னில்

உ—ம் அதுவேமூலஅஞ்ஞானம்

ச—கை இந்தஅவித்தை யெத்தனைவிதமாயிருக்குமென்னில்

உ—ம் ஆவரணமென்றும் விட்சேபமென்று மிரண்டுவிதமாயிருக்கும்

ச—கை அந்தஇருவகைக்கும் லட்சணமேதென்னில்

உ—ம் நான்கூடஸ்தனைக் காணேனென்கிற அறிவாகவிருந்தும்கூடஸ்தர்தோற்றமில்லையென்கிற பக்கமே யாவரணம் கிளிஞ்சலைவெள்ளியென்று பார்க்கிறதுபோல கூடஸ்தராவசைதன்னியமாயிருக்கிறதன்னைக்கற்பிதமாயிருக்கிற அகங்காரியாய்க் காண்கிறதே விட்சேபம்.

ச—கை ஆதித்தனிடத்திலே யிருளிராததுபோல சுயம்பிரகாசமாயிருக்கிற ஆத்மாவிலே அப்பிரகாசமாயிருக்கிற அஞ்ஞானம்வரக் கணக்கில்லையே இதுநமக்குச் சம்மதமென்றாலும் அஞ்ஞானகாரியமான ஆவரணம் எப்படிவந்தது இதுவுமில்லையென்றால் ஆவரணத்தைப்போக்குகிற வேதாந்தத்தைப்படிக்கக் கணக்கில்லையேயென்னில்

உ—ம் நான் அஞ்ஞானியென்கிற அனுபவஞ் சேபத்தினிடத்திலே காணப்படாமல் சித்தினிடத்திலே காணப்படுகிற திருஷ்டமேயாம்

ச—கை அனுபோகங்கண்டாலும் யுத்திகூடாதேயென்னில்

உ—ம் திருஷ்டமாய்க்கண்ட காரியத்திற்கு யுத்திதேவையில்லை காணாத காரியத்திற்கே யுத்திவேண்டும்

ச—கை இப்படி சங்கித்தாலல்லவோ புத்தியிலே தூணைகணங்கியாயம் போல திடப்படுமென்னில்

உ—ம் சுவானுபத்தைக்கடந்து சங்கிக்கலாகாது ஆகையினாலேகூடஸ்தருக்கும் அஞ்ஞானத்திற்கும் விரோதமில்லை கூடியேயிருக்கலாம்

ச—கை ஆனலிந்தஅஞ்ஞானத்தைத்தள்ளுகிற விரோதியெது அது என்னவேகாணலாமென்னில்

உ—ம் சாஸ்திர விசாரஞானமே யஞ்ஞானத்திற்கு விரோதியதுஞானிகளிடத்திலேகாணலாம்

ச—கை விட்சேப மென்னப்பட்ட அகங்காரியாவதார் அவனெதினாலே கற்பிக்கப்பட்டான் அவனுக்கதிட்டான மேதென்னில்

உ—ம் காரியகாரண சரீரத்தையுடைத்தான சைதன்னியமே அகங்காரி அஞ்ஞானகாரியமான விட்சேபத்தினாலே கற்பிக்கப்பட்டான் அவனுக்கு அதிட்டானங்கூடஸ்த சைதன்னியம்

ச—கை இந்தகற்பிதமாயிருக்கிற அகங்காரிக்குஞ் சுபாவமாயிருக்கிற தனக்குஞ் சுபாவமாயிருக்கிற பேதமெப்படி பிரசித்தமாயிருக்கிற அப்பேதமெப்படியென்னில்

உ—ம் ஈதென்னப்பட்ட அதிஷ்டானக் கிளிஞ்சிலுண்மை வெள்ளியென்கிற ஆரோப மித்தை யென்கிறதுபோல சுபாவசித்தபேத மென்றறிக இதுவெள்ளியென்கிற வொருமை மயக்கம் போல நான்தானென்கிறவொருமையேபிராந்தி

ச—கை ஈதென்கிறசாமான்னியம் போலவும் வெள்ளியென்கிற விசேடம்போலவும் ஆத்மாவும் அகங்காரியும் எங்கும் காண்பிக்கவில்லை யென்னில்

உ—ம் தேவதத்தன்றான்போனவன் எக்ஞியதத்தன்றான் கண்டவன் நீதான்சொன்னவன் நான்தான் கேட்டவனென்கிற விவகாரத்திலே இது வெள்ளியிதுபுடவை யிதுசடமென்கிறதுபோலச்சாமான்யம் விசேடம் இரண்டுங்காண்பிக்கின்றது

ச—கை இந்தப்பேதஞானத்திலே யுமக்குப்பிரயோசனமேதென்னில்

உ—ம் தானென்கிறசொல்லுக்கு அர்த்தம்நானென்கிற அகங்காரிக்கு அன்னியரான கூடஸ்தனொன்றே ச்த்தார்த்தம

ச—கை கடந்தான் படந்தான் கோபுரந்தான் என்னுமிடத்தில் அசேதனத்திலே தானென்கிற சொல்லுவரலாமோவென்னில்

உ—ம் சிதாபாசனில்லாததுபற்றிச் சடமென்று சொல்லப்பட்ட கடபடாதிகளுஞ் சிதாபாசனைப்பற்றிச் சேதனமென்று காண்பித்தபிரமாதிஸ்தம்ப பரியந்தமான பிராணிகளும் ஆத்மாவொருவரிடத்திலே யிருவகைக்கற்பிதங்களானபடியினாலே யெல்லாவற்றையும் பற்றித்தானென்று வழங்குகிறசொல் எங்கும் ஆத்மாவும் யென்கிறதைக் காட்டுகின்றது ஆகையினால்தானென்கிற சொல் எங்கும்வரலாம்

ச—கை தானென்றசொல்போல அதுஇதுவென்கிறசொல்லும் எல்லாவற்றிலும் சாமான்னியமாக விருக்கையினால் இதுகளும் வாத்மாவாகட்டுமேயென்னில்

உ—ம், இதுஅதுவென்கிறசொல் நல்லது பொல்லதென்கிற சொல்போலப்பட்டுப்பாதியிலே சாமான்னியங்கண்டதேயல்லாமல் முற்றுங்காணவி





ல்லாமாகையினாலே யிதுதான் அதுதான் நல்லதுதான் பொல்லாதுதா னென்று சர்வதந்திரசாமானியமாய்த் தோற்றுகிறதுதானேயாத்மாவெ ன்றும் விசேடமெல்லாம் மாயாகற்பிதமென்றுஞ் சித்தாந்தம்

ச—கை இதுயெல்லாருக்கும் ஏன்தெரியவில்லையென்னில்

உ—ம் முன்சொன்ன அஞ்ஞானத்தினாலே தாரான்மிய அத்தியாசத்தை யடைந்த அஞ்ஞானிகள் சாமானியவிசேடம் வெட்டவே காரியவேறு பட்டிருக்கினுமொன்றாய்க்கண்டார்கள்

ச—கை இந்தஅத்தியாயமெப்படிபோமென்னில்

உ—ம் விசாரஞானத்தினாலே அஞ்ஞானமும் சாவரமும் போமென்று முன்சொன்னதேயாம

ச—கை இந்த ஞானிக்குக்காரணமான வஞ்ஞானம்போயுங் காரியமான விட்சேபமிருப்பானேனென்னில்

உ—ம் விட்சேபத்திற்குக்காரணம் அஞ்ஞானமென்றுங் கர்மமென்றும் இருவகை அவற்றில் அஞ்ஞானநசித்தும கர்மநசியாதபடியால் பிராரத்வந் தொலையுமட்டுமிருக்கும்

ச—கை காரணம் நட்டமாயுங் காரியமிருக்குமென்கிறது நியாயமல்லவே யென்னில்

உ—ம உங்கள்தாக்கமதத்திலே காரணநட்டமாயுங் காரியஞ்சற்றுப்போ திருக்குமென்பது நமக்குஞ்சரியல்லவோ

ச—கை இப்படியானாலுங் காரணத்திற்குப்பின் காரியஞ் சற்றுநேரமல் லோ இருக்கவேண்டும் ஒருபுருடாயுசுள்ளமட்டு மிருக்குமென்கிறது கூடாதேயென்னில்

உ—ம் இரண்டொருநாளிலுண்டான காரணதிரவிய மென்னப்பட்ட நூல்வெந்தும் ஒருசாமம காரியதாமசமுண்டென்றால் அனந்தகற்பத்தி யிலேயிருக்கிற அஞ்ஞானப்பிராந்தி நட்டமானாலும் அதின்காரியமா ன விட்சேபம் பிராரத்தத்தோடே போமென்றது சொற்பமல்லாமல்வி ஸ்தாரமல்ல

ச—கை இப்படி தர்க்கமென்றதேயல்லாமல் பிரமாணமில்லையோவென் னில்

உ—ம இப்படி வாயடிகையடி அடிக்கிறது உங்கள்தர்க்கமதத்திலேயல் லாமல்நமக்கு சுருதியுக்தியனுபவமூன்றுமுண்டு

ச—கை இனிதாரகம்போதும் உமதுசித்தாந்தமேதென்னில்

உ—ம அஞ்ஞானிகள் நான்தானென்கிற இருவகையுமொருவனைக்கண் டுகலங்கிச் சம்சாரத்திலே பாடுபடுவாரகளென்றும் அந்தஇருவகையும் வேதாந்தஞானிகள் பகுத்தறிந்து முத்தராவார்களென்று மறிகிறதேசி த்தாந்தம

ச—கை வேதாந்தமல்லாத சாத்திரத்தினாலே முத்தியில்லையோ வென் னில்

உ-ம், மற்றைச் சாத்திரமெல்லாம் பிராந்தாளாலே கற்பிக்கப்பட்ட சாத்திரமானபடியினாலே கலக்கத்தின்மேற் கலக்கமாய் குழம்புமல்லாமற் பிராந்தியைத் தெளிவிக்கமாட்டாது.

ச-கக, இன்னவின்ன சாஸ்திரகாத்தாக்கள் இன்ன வின்னதைப்பொருளென்று கலக்கினார்களென்கிறதையும் இவர்களுக்குப் பரம்பரையாய்த் தெளிவுவரும் வழியுமின்னபடி யென்று சொல்லவேண்டுமென்னில்

உ-ம், பாமரரும் லோகாயுதர்களும் விரோசனன் சொன்ன சித்தாந்தயுத்தியினாலே தூலசரீரமே ஆத்மாவென்பார்கள் சாருவாகனன் சீவன் போனபட்டிலே சரீரமிருந்துப் போகிறபடியால் நான்கண்டேன்கேட்டேனென்கிற யுத்தியினாலும் தூலதேகமாத்மாவல்ல இந்திரியமேயாத்மாவென்றுஞ் சொல்லுவான் பின்னைச் சில சாருவாகர் பிராணன் போனால் இந்திரியங்களிராதபடியினால் பிராணனே யாத்மாவென்பார்கள் உபாசகர்கள் மனதுஇல்லாதபோது பிராணன் தெரியாதபடியினாலே மனமேயாத்மாவென்பார்கள் சௌனிகவாதிகள் புத்தியில்லாவிட்டால் மனதுவாதிக்கிறபடியினாலே புத்தியேயாத்மாவென்பார்கள் பிரபாகரன் சுழுத்தியிலே புத்திமுதலாக வொன்றுமிராதபடியினாலே சூனியமாத்மாவென்பான் பட்டசாரியார் சுழுத்தியிலே சூனியமாயிருந்தேனென்று சொல்லுகிறபடியினாலே அத்மாசத்தென்பார்கள் அருகதரானவரும் ஆகாரக்காரருஞ்சுழிமுனைநாடி வழியிலே சஞ்சரிக்கிறபடியினாலே ஆத்மாவணுவென்பார்கள் திகம்பரர்கள் யாத்திரைமஸ்தகபரியந்தம் அறிவுகலந்திருக்கிறபடியினாலே ஆத்மாபுருடப்பிரமாணமென்று சொல்லுவார்கள் பிரபாகரரும் தார்க்கீகரும் ஆத்மாபரிச்சின்னமாயிருந்தாலழிந்து போமென்று பரிபூரணமாய் சடமாயிருக்குமென்பார்கள் பாட்டமதத்திலே சுழுத்தியிலே சடமாஞ்சாக்கிரத்திலே அறிவாயுங் காண்பிக்கிறபடியினாலே ஆத்மாசடசித்தாயிருவகையுமாயிருக்குமென்றுஞ்சொல்லுஞ்சாங்கியபதத்திலே பூரணத்திற்குத்திரண்டுஇலக்கணங்கூடாது ஆத்மாசித்தாய்பரிபூரணமாயிருப்பார் அவர்களிடத்திற் சுழுத்தியிற்காண்பிக்குஞ் சடம் அந்தஆத்மாக்களுக்குச் சுகதுக்கங்கொடுக்கவந்த பிரகிருதியென்றுசொல்லும் யோகமதப்பிரகிருதி தானுமொருவரில்லாவிட்டாற் சேட்டிக்கமாட்டாதென்றும் அடக்கியாளுவாரில்லாவிட்டால் ஆத்மாக்களுக்குப் பந்தமோட்சமில்லையென்கிறபடியினாலே இந்தஆத்மாக்களைத் தவிர ஈஸ்வரனொருவனுண்டென்றுசொல்லுஞ்சஞ்சலமதம் அசங்கசேதனனியமேசஸ்வரனாலெல்லாரையுமடக்கியாளமாட்டாதுயாகையினாலே அந்தரியாமியேயீஸ்வரனென்றுசொல்லுகிறதாரகிதமதம் அந்தக்கரணமில்லாவிட்டால் சங்கற்பங்கூடாதுபாகையினாலே இரணியகெர்ப்பனேயீசுரன் அந்தரியாமியல்லவென்றுசொல்லும் சிலவரும் அதன் தூலசரீரத்தைவிட்டுச் சூக்ஷசரீரந்தரிப்பதில்லை கிருஷ்ணன் விஸ்வரூபங்காட்டுகிறபோது பெருங்கால் பெருந்தேகமாக காண்பித்ததினாலே விராட்புருடனே ஈசுரனென்றி

யகொப் னல்லவென்றுசொல்லும் பிரசாபத்தியமதம் யெங்குங்காலிரு ந்கிறவா ஈச்சுரனுனல்லாமலவ னுடையும் ஈசுரனுகவேணும் ஆகையினுலே பிரமாவேயீச்சுரனல்லாமல்மற்றதுஈச்சுரனல்லவென்றுசொல்லும்வயிஷ்ணவமதம இந்தப்பிரமாவும் விஷ்ணுவினுடைய திருநாபியிலே பிறந்தினுலேவிஷ்ணுவேஈசுரனென்றுசொல்லும் சைவாகமஞ்சிவனுடைய பாதம் விஷ்ணுவினுலேகாணப்படாதபடியினுலேசிவனேஈச்சுரனுகவேணுமென்றுசொல்லும் காருபத்தியமதம்திரிபுரசங்காரத்திலே, சிவனுங்கணபதியைப் பூசைபண்ணபடியினுலே விக்கினேச்சுரனே ஈசுவரனென்று சொல்லும் புராணிகமதம் இப்போதுசொல்லப்பட்ட தேவகதைகளெல்லாம் புண்ணியநதலங்களிலே விளங்குகையினுலே தலங்களே ஈச்சுவரனென்றுசொல்லும் விருட்சாச்சனை மதத்தலங்களுமரங்களாலே விளங்குகையினுலும் மூங்கில் அரசுமெருக்கு முதலானதுகளை அவாளவாள் குலதேவதைகளாகப்பூசை பண்ணுகையினுலும்மரங்களையே ஈசுவரனென்று சொல்லும் இப்படியின்னம் அனேகவாதிகள் தங்கள்தங்கள் மதாபிமானத்தினுலேமந்திரசாந்திர கற்பாரசவாதற்ப முதலானதுகளைத்தொடுத்துக்கொண்டு அலைந்தார்கள் இவ்விதமாக அஞ்ஞானசாத்திரகர்த்தர்கள் அலைந்ததுமிசொன்னேம்.

ச-ங்கை இப்படியெல்லாச்சாத்திரகர்த்தாக்களும் வஸ்துநிண்ணயம்பண்ணமாட்டாமல்அலைந்தால்தத்துவநிண்ணயம்பண்ணுவதெப்படியென்னில்

உ-ம் பிரமமொன்றேபொருள்மற்றுள்ளதெல்லா மாயாமயமென்கிற வேதாந்தத்தை விசாரித்து வஸ்து நிண்ணயம் பண்ணவேண்டும்.

ச-ங்கை அப்படியானுலிந்தவாதிகளுக் கெல்லாம் விரோத மல்லவோவென்னில்.

உ-ம் ஒன்றேபொருளென்கிற வேதாந்திக்கும் அதைத்தானேகுருடர்யானைகண்டாற்போலக் கண்டிருக்கிற இந்தவாதிகளுக்குஞ் சற்றும் விரோதமில்லை.

ச-ங்கை பிரமமொன்றேஉண்மைப்பொருளென்கிறவேதாந்தத்துக்குமற்றுள்ளவெல்லா மாயாமயமென்கிறதற்கும் பிரமாணமேதென்னில்.

உ-ம் இப்படிசொல்லுகிற முப்பத்திரண்டுபகிஷத்துமேபிரமாணம்.

ச-ங்கை இவ்வளவுஞ்சித்துலட்சணம் வேதாந்தத்திலே மாயைக்குலட்சணமெப்படியென்னில்.

உ-ம் மோகலட்சணமும் சடலட்சணமுமாயிருக்கும்.

ச-ங்கை இந்தப்பிரபஞ்சத்திலே மாயாலட்சணமிருவகையும் பகுத்துக்காட்ட வேண்டுமென்னில்

உ-ம் கடமுதலான பூதபௌதிகமெல்லாஞ் செடமாயிருக்கக்கண்டோம் சத்தென்றும் அசத்தென்றும் தனக்கு அகப்படாதபடியினுலே மோகமாயிருக்கக்கண்டோம்

ச-ங்கை சீவன் ஈஸ்வரன்செகத்தெல்லாமெல்லாரும் உண்மையாய்க் கண்டிருக்கிறதுமாயையென்கிறதெப்படியென்னில்

உ-ம். இந்தமாயாகற்பிதமெல்லாம் லௌகிகதிருஷ்டியினாலே யுண்மையாகவும யுக்தியினாலேயனிர்வசனமாகவும் வேதாந்தஞானதிருஷ்டியினாலேகாலத்திரயத்து மில்லாததாகவும் இப்படி மூன்றுவிதமாயிருக்கும்

ச-கை இந்தமாயாகற்பிதபிரபஞ்சமெல்லாம் எந்தகாலத்திலேயுண்டு எந்தக்காலத்திலே யில்லையென்னில்

உ-ம, சாக்கிரத்திலுஞ் சொற்பனத்திலும் விசித்திரசித்திரப்படம்போலே யுண்டாயிருக்கிற காலமொன்றுஞ் சுழுத்திமூர்ச்சைசமாதிகளிலே சுருட்டினசித்திரப்படம்போல இல்லாதகாலமொன்றுமாம

ச-கை இந்தமாயைசுதந்தரமோ பராதீனமோவென்னில்

உ-ம். சைதன்னியத்தையன்றியிலே விளங்காததபடியினாலே பராதீனமுமாம் அசங்கமாயிருக்கிற கூடஸ்த சைதன்னியத்தை செடமாயிருக்கிற செகத்தாகவும் நித்தியாபாசனாயிருக்கிற சீவேஸ்வரனாகவும் பண்ணுகையினாலே சுதந்தரமுமாம

ச-கை இப்படியானால் மாயையினாலே பிரபத்திறதச சொரூபஞ் சங்கையென்னில்

உ-ம் மாயைகூடஸ்தத்தைத் தொடாமலறுமே சீவன் செகத்தையுண்டாக்குகையினாலே சொரூப அழிவுகெடவில்லை

ச-கை மூன்றிலுமாகத்தைத்தானே சிவன்செகந்தாயப்பண்ணினதென்கிறீர் அதைதான் தொடாமலும் பண்ணினதென்கிறீர் இந்தஇருவகையுங்கூடாதேயென்னில்

உ-ம். கூடாததைக்கூட்டிவைக்கிறதே மாயைக்குச் சுபாவமென்று வேதஞ்சொன்னபடியினாலே விரோதமில்லை நீமயங்கவேண்டாம்

ச-கை இப்படிமாயைகற்பித்ததெல்லாம் கூடாததைககூட்டிவித்ததாகவிருக்குமோ இப்படிக்கொத்தசத்தி மாயைக்குயெங்கேயிருந்து வந்ததென்னில்

உ-ம் ஒருமாலைக்குப்பிறந்த ஐந்துபூதங்களிலே ஒன்றிலேகடினமும் ஒன்றிலேகுளிர்மையும் ஒன்றிலேசூடும ஒன்றிலேசலனமும ஒன்றிலே வெளியுங் கண்டபடியினாலே இந்தமாயைக்கூடாததைக் கூட்டிவைக்கிறதென்றே சுபாவம் இந்தசத்தி மாயைக்குச் சுபாவமேயல்லாமல் ஒன்றினால் வந்ததல்ல

ச-கை. எல்லாரும் இந்தச்செகத்துமாயாமயமென்கிறதை யேன் அறியவில்லையென்னில்

உ-ம். இந்திரசாலக்காரனைக் காணுமளவும் இந்திரசால முண்மையாய்த் தோற்றுகின்றதுபோலமாயைக்கு அதிட்டானத்தையறியுமளவும் மாயை யுண்மையாய்த்தோன்றும அதிட்டானத்தையறிந்தால் பொய்யாய்ப்போம்;

ச-கை சகலவாதிகளும் மாயைக்குள்ளேதானே இதுபொருள் அதுபொ ருளென்று சங்கிக்ககாரியமேதென்னில்

உ-ம் சந்தேகசொரூபமாயிருக்கின்ற மாயைக்குப் பரிகாரந்தேடாமல் ச ங்கைக்குள்ளே சங்கைபண்ணுகிறது அவர்களைப்பிடித்தஅஞ்ஞானம்.

ச-கை ஆனால்இதற்குப் பரிகாரமேதென்னில்

உ-ம் இதுபொருளல்ல மாயையென்றறிகிறதே பரிகாரம்

ச-கை கண்ணாரக்கண்டு நிர்ணயமாகாத இந்திரசாலம்போலே இந்தச் செகத்துமாயமா யிருக்கவில்லையே உண்மையாகவல்லோ யிருக்கின்ற தென்னில்

உ-ம சத்துஅசத்தென்று இருவகைநிர்ணயத்துக்கு மகப்படாதசெகத்தை உண்மையென்கிறது உன்னுடையபட்சபாதமேயல்லாமல்செகத்துமா யைதானே

ச-கை நீசொன்னதேயல்லாமல்செகஞ்செகத்துமாயையென்றுசொன்ன பேருண்டோவென்னில்

உ-ம். செப மாயக்கெர்ப்பவாசம்பண்ணி சுக்கிலஞ்சேதனப்போலப் புற ப்படடுப்பெரியவன்சிறியவனென்றுண்டுடுத்துக்கண்டுகேட்டுத் திரி கின்றதைப்பார்க்க வேறேயிந்திரசாலமேதென்று வசிட்டரும் இந்தத் தேகம்போலே யாலமாமுதலானதுகளும் வினையெங்கேவைத்ததுமா மெங்கேவந்ததென்று மயங்காதுசகலமுமாயையென்றே காணவேண் டுமென்று வியாசரும் மனதிலே சிந்திக்கிற நிர்ணயமாகாதபொரு ளைத்தர்க்கிக்கவொண்ணாதென்றும் நிர்ணயிக்கப்படாத செகத்திலே இதுபொருள் அதுபொருளென்று சங்கிக்கத் தேவையில்லை சகலமு மாயையென்றே காணவேண்டுமென்று யாவர்களுக்கும் திருவுளமிய ற்றியிருக்கிறார்கள் பின்னும்பின்னபடியென்றுசிந்திக்கப்படாததையு ண்டாக்குகிறசத்திமாயையென்றுயெல்லாருஞ்சொல்லியிருக்கிறார்கள்

ச-கை இந்தமாயைக்கெல்லாம பீசமெங்கேகாணலாமென்னில்

உ-ம் மறந்தநித்தையடக்கியிருக்கிறதினைப்போலே சாக்கிரா சொப்பனபிரபஞ் சத்தையடக்கியிருக்கிற மாயாபீசம்சுழுத்தியிலே யெல்லாருங்காண லில்லையா

ச-கை சகலபுத்திவாசனையு மாயையிலேயடங்கு மென்கிறதற்கடையாள மே தென்னில்

உ-ம், மாயாப்பிரதிவிம்பும்மாயையிலே சகலவாசனையுங்கண்டு சர்வக்கிய ராயிருக்கின்றதே யடையாளம்

ச-கை, ஆனாலீஸ்வரவுபாதியெப்படியிருக்குஞ் சீவவுபாதி யெப்படியிரு க்குஞ் சீவேசுரர்களெப்படி யிருப்பார்கள் ஈசுவரனையறிகிறதெப்படி யென்னில்

உ-ம் மேகம்போலே யிருக்கும்மாயை மேகத்தின் வில்லைப்போலேயிரு க்கும் புத்திவாசனைகள் திவலையிற்பிரதிவிம்பித்த வாகாசம்போலே

யிருப்பான் சிதாபாசன் மேகாசம்போல் ஈசுவரனையனுமானத்தினாலே யறியவேண்டும்.

ச-கை, இந்தப்புத்திவாசனைகளிலே பிரதிவிம்பித்தால் சிதாபாசனையும் மாயாப்பிரதிவிம்பராயிருக்கின்ற ஈஸ்வரனையும் எந்தவடைவிலே பகுத்துக்காண்கிறதென்னில்

உ-ம், வாசனையானது சிதாபாசனுடனேகூடப் புத்திரூபமாயுதிக்கிறபோது சிதாபாசத்தை வெட்டவெளியாய்க்காணலாம் ஈஸ்வரத்தைசாவத்தியென் சர்வேஸ்வரன் அந்தரியாமியென்று வேதஞ்சொல்லக்கேட்டறியலாம்

ச-கை, இரண்டுபேருஞ் சிதாபாசராளானால் இவர்களுக்குத் தாரதம்மியமேதென்னில்

உ-ம், சிலர்கள் மாயையின் வசமாயிருக்கிறபேர்களென்றும் மாயைத்தான் வசம்பண்ணிக்கொண்டவர் ஈஸ்வரனென்றுந் தாரதம்மியங்காணலாம்

ச-கை, ஈஸ்வரனை சாவக்ஞனென்பதும் அந்தரியாமியென்பதும் சர்வேஸ்வரனென்பதும் யெதினாலென்னில்

உ-ம், இவருக்கு உபாதியணமாயையிலே சகலமுமிருக்கிறபடியினாலே சர்வக்ஞனென்பதும் சகலருக்கும் புத்திகளுக்குள்ளிருந்து யாட்டுகிறபடியினாலே அந்தரியாமியென்பதும் இவருண்டாக்குகிற பிரபஞ்சத்தையொருத்தராலுந் திருப்பப்படாதது கொண்டு சர்வேஸ்வரனென்பதுமாம்

ச-கை இந்தஈஸ்பரனுக்குச்சர்வக்ஞத்துவமுண்டானால் எல்லாராலுமேன் அனுபவிக்கப்படவில்லையென்னில்.

உ-ம் வாசனைகளெல்லாம் பரோட்சமானபடியினாலே யனுபவிக்கப்படவில்லை.

ச-கை அந்தரியாமிக்கிருத்தனேதுணை முண்டென்கிறதற்குப் பிரமாணமேது இவருக்குச்சரீரமேது இவர்கற்பித்தநேபிரபஞ்சத்திற்குவழியென்கிறதற்குப் பிரமாணமேதென்னில்

உ-ம் அந்தரியாமிக்கிருத்தனேதுணையென்கிறதற்குவேதம்பிரமாணம்புடைவயிலே நூலுபாதானமாயிருக்கிறபோலச் சகலத்திலுமிவருபாதானமாயிருக்கிறபடியினாலே சகலமுமிவருக்குசரீரம ஈஸ்வரனபூதங்களிலுமிருந்து தேகாதிபாவைகளை யபிமானககயிற்றைப்பூட்டி விதிநிட்டேதவழியேயாட்டுகிறானென்கிற கிரமவசனமும் இதுதர்மமென்றறிவேன் இதிலேமிளவுமில்லை இது அதர்மமென்றறிவேன் இதில் திரும்பவுமில்லை யாரோவொருவனிப்படியாட்டுகிறானென்கிற பழவசனத்தையும்பிரமாணம்.

ச-கை சகலமுமிப்படி யீஸ்வரனேயாட்டுகிறதினால் புருடனுடையவுஞ்சாகசத்தேவையில்லையோ வென்னில்.

உ-ம், உச்சாகமும் அவரவர்கள் மத்திரகிடாப் ஈஸ்வர சங்கற்பமே யான படியினலே உச்சாகமும்பண்ணவேண்டும்

ச-கை, அப்படியானல் ஈச்சுரசங்கற்பந் தேவையில்லையேயென்னில்

உ-ம, ஈச்சுரவரப்பிரசாதங் கொண்டுதான் அகங்களென்கிற ஞானம்வர வேண்டிய படியினலே யீச்சுர அனுக்கிரகமும் வேண்டும

ச-கை, ஈச்சுர அனுக்கிரகங்கொண்டுதான் அகங்களென்கிறஞானம் வந்தனுறபிரயோசனமே தென்னில்

உ.ம, இதனுல்முத்தியென்று வேதஞ்சொல்லுகின்றது

ச கை, அந்தரியாமி சிருடடிக்கிற அடைவேது அழிக்கிற அடைவேது யென்னில்

உ-ம், சித்திரப்படத்தைவிரித்தாப்போலத் தம்மிடத்திற்பிரபஞ்சத்தைய வறவர் கர்ம வசத்திலே தோற்றுகிறதே சிருட்டியும் சுருட்டினபடம் போல அவரவர் கர்மத்தின்வழியே பிரபஞ்சத்தைத் தம்மிடத்திலே யடக்குகிறதே பிரளயமுமாம்

ச-கை, ஒருஈச்சுரனே சித்திக்குஞ் செகத்துக்கும் காரணமெப்படியாவரென்னில்

உ-ம், சைதன்னியமான படியினலே சித்திகரும் மாயையினுபாதியைப் பற்றிச்செடத்துக்குங் காரணமாவர்

ச-கை, இப்படியானுற் பிரமந் தானேசெகத்காரணமென்று சுரேசுவராசாரியார் சொல்லுவானென்னில்

உ-ம், உயிரையுங்கூடஸ்தரையும் அன்னியோன்னிய அத்தியாசத்தினலேயொருமைப்பாமல் கண்டாப்போல ஈச்சுரனையும்பிரமத்தையு மொன்றுகக்கண்டுசொன்ஞர்.

ச-கை அன்னியோன்னிய அத்தியாசமெப்படிகூடுமென்னில்.

உ-ம், ஈச்சுரனுடையசெகத்காரணத்துவம் பிரமனிடத்திலும்பிரமத்தினுடைய சச்சிதானந்த லட்சணம் மாயப்பிரதிவிம்பரிடத்திலும்அத்தியாசம்பண்ணப்பட்டுங்கஞ்சிபூசினபடம்போலொன்றுச்சுது.

ச-கை இந்தவுளவுகீரறிந்தவகையெப்படியென்னில்.

உ-ம், ஆறுலிங்கத்தாலும் வேதாந்தவியாசாரம்பண்ணிப் பிரமமேயசங்கமென்றும்மாயாப்பிரதிவிம்பரேசிருட்டிக்கிறவரென்றுமறிந்தோம்,

ச-கை சிருட்டிபண்ணின அடைவெப்படியென்னில்,

உ-ம், ஆனந்தமயமாயிருந்த ஈச்சுரன்சுழுத்தி சொப்பனமாகிறுப்போல மாயையைவிரியப்பாத்து இரணியகெர்ப்பருனர்.

ச-கை ஒருவேதத்திலேயொன்றிலேயென்றுண்டாச்சுதென்றுகிரமசிருஷ்டிசொல்லுகிறது ஒருவேதத்திலேயொருமித்தசிருஷ்டிசொல்லுகிறது எது பிரமாணமென்னில்.

உ-ம், இரண்டுவகைசொப்பனமு முண்மையானபடியினாலேயிப்பிரமா ணம்.

ச-கை, இரணியகெர்ப்ப சொரூப மெப்படியிருக்குமென்னில்

உ-ம், சூட்சுமசரீரசமஷ்டியாயப் படத்திலே சூத்திரமிருக்கிறாப்போலெங்குமிருப்பதால் இச்சாசத்திகிரியாசத்தி ஞானசத்தியுடையவ னிரணியகெர்ப்பர்

ச-கை, இந்தஇரணியகெர்ப்ப னெப்படி காண்பிக்குமென்னில்

உ-ம், சந்தியிருட்டியிலே காண்பிக்கிறவுலகம்போலவும் கரியாலேயச்சுக்கட்டின சித்திரப்படலம்போலவும் எங்குமொக்கதுயுமுளையாயிருக்கிற பயிர்களைப்போலவும் ஈசுவரசூட்சுமசரீரம் அழுகாகவெங்குமெக்கா லஞ்சனைபண்ணப்பட்டுத்தோற்றும்

ச-கை, இந்தஈசுவரனுடைய சூட்சமசரீரந்தால அவஸ்தையையடைந்துதோற்றுகிறதெப்படியிதற்குப்பிரமாணமெப்படி இவ்வவையவங்களைதுஅந்தஅவயவங்களைப் பூசித்தால்பலமேதென்னில்

உ-ம், பஞ்சீகரணம்பண்ணப்பட்டு வெயிலிலே விளங்குகின்றலோகம்போலவும் தீர்ந்தசித்திரப்படம் போலவும் பழுத்திருக்கிறபயிர்வகைபோலவும் வெட்டவெளியாயத்தோற்றின ஈச்சுரசரீரமுமவிராட்டென்பதுவிசுவரூப அத்தியாசமும்புருஷ சூக்தவேதமுமப்பிரமாணம் பஞ்சமூர்த்திகள் வாணுசிரமுடையபோகள்தேவசுராதிகள் சமுயஜாதிகள் மயில்ராமாரி முதலானது வாச்சியுளி முதலானதெல்லாம் ஈச்சுரனுடைய அவயவம உபாசித்தமூர்த்தியதிகாரிக்குதத்தக்கதாய்ப்பலம்வரும்

ச-கை, எல்லாரும்பூசிக்கிற ஈசுவராவய்வானுல் மோட்ச மெல்லாருக்கும் ஏன்வரவில்லை யென்னில்

உ-ம், மாயிகத்தை யுபாசித்தால் மாயிகபலமேயல்லாமல் மோட்சம் வராது

ச-கை, பின்னேதினாலே மோட்சம் வரவேண்டுமென்னில்

உ-ம், பிரமதத்துவவிசாரத்தினாலே மோட்சம் வருகிறதேயல்லாமல் மற்றொன்றினாலேவராது

ச-கை, பிரமஞானமன்றியிலே பின்னை யொன்றினாலேயுஞ் சஞ்சாரம் போகாதோ வென்னில்

உ-ம், தான்விழித்தா லொழிப்பதன்னுடைய சொப்பனம் போகாதது போலஅத்துவித பிரமஞானத்தினாலே அஞ்ஞான கற்பிதமான சிவேசுரசெகத்தென்கிற சொப்பனமும் போகவேண்டும்

ச-கை, பிரமத்திற்கு அபின்னமாயிருக்கிற சிவேஸ்வரானையுங்கற்பித செகத்தோடே கூட்டலாமோவென்னில்

உ-ம், அவர்களும் மாயாகற்பிதமான படியினாலே செகத்தோடேகூட்டலாம்

ச-கை. இனியிவர்களாலே கற்பிதமேதென்னில்

உ-ம், வீட்சணமுதற் பிரவேசாந்தசிருஷ்டியெல்லாம் ஈசுவரன் கற்பித்ததும் சாக்கிரமுதல் மோட்சபரியந்தஞ் அவன்கற்பித்ததுமாம்

ச-கை-இப்படிபிரமமாத்திரமே யுண்மைப்பொருளானல்வாதிகளெல்லாருஞ் சிவேசுரவிடையத்திலே வாதம்பண்ணிமா யக்காரணமேதென்னில்

உ-ம். அவர்களைப்பிடித்த அஞ்ஞானமே காரணமாகவிணிலே மாய்கிறார்கள்

ச-கை, நீரொருத்தரிருக்க இந்தவாதிகளிப்படி கெட்டுப்போகலாமா இந்தத்தத்துவத்தை அவர்களுக்குப் போதித்தருளுமேயென்னில்

உ-ம், பிராந்தாளுக்குப்பக்குவர்வரா முன்னமேபோதித்தால் இளைப்புமாத்திர மிச்சமல்லாமல் அவாள்புத்தியிலேயே யேராது

ச-கை. எந்தவாதிகள் எதிலேபிராந்தாளாயிருக்கிறார்களென்னில்

உ-ம், லோகாயுதமுதல் சாங்கியமதபரியந்தஞ் சிவப்பிராந்தியிலேயலைந்தபேர்கள் யோகமுதல்விருடார்ச்சனைபரியந்தம் ஈஸ்வரபபிராந்தியிலேயலைந்தபேர்கள்

ச-கை, பெரியோர்களாயிருக்கிற சாஸ்திரக்கர்த்தர்களைப் பிராந்தாளென்று சொல்லலாமோவென்னில்

உ-ம். அத்வைதபிரமத்தை யறியாதபடியினலே இவர்கள் பிராந்தளென்பதுதப்பாது இவாகளுக்கு இகபரமிரண்டுமில்லை

ச-கை சிவவாதிகளோடே ஈஸ்வரவாதிகளையும் பிராந்தாளென்றுசொல்லலாமோவென்னில்

உ-ம் சொற்பனத்திலே பிட்சையெடுக்கிறவனிலும் இராசாவாயிருக்கிறவன் அதிகமானாலும் விழித்தபின்பு இரண்டுஞ்சரியாய்ப்போமென்கிறாப்போல இருவகைவாதிகளுக் கற்பித்ததிலே தாரதன்மியமானாலும் ஞானவந்தாளைகுறித்து இரண்டுபேரும் பிராந்தாளேயாம

ச-கை, மோட்சம்வேண்டுமென்கிறவனுக்கு இந்தவாதங்களை விசாரிக்கத்தேவையில்லையோ வென்னில்

உ-ம், பூர்வபட்சமாய் விசாரித்துத்தள்ளி விடுகிறதேயல்லாமல் சித்தாந்தமாய் விசாரிக்கவேண்டியது வேதாந்தமேயாம்

ச-கை சாங்கியம் யோகம்இந்தவிருவகையிலேயுஞ்சொன்ன சிவனும் ஈஸ்வரனுஞ்சுத்தசைதன்னியமானபடியினலேஇந்தஇரண்டையும்வேதாந்தத்திலே கூட்டலாமே இந்தஇரண்டையுந் தள்ளப்படாதேயென்னில்

உ-ம். அதிலேசிவேஸ்வராளுக்கு பேதஞ்சித்தமானபடியிலே நமதுசித்தாந்தத்திற்குககூடாது

ச-கை. உம்முடையபதத்திலே தற்பதத்திற்குந் தொம்பதத்திற்கும் அர்த்தபேதமில்லையோ வென்னில்

ச—கை அத்துவிதத்தைப்போதிக்கவேண்டுமென்கிறதற்காகவொருவகுப்பு ப்பகுத்துக் காட்டினதேயன்றி அர்த்தபேதமில்லை இப்படியானால்பட்சணையிலே பதார்த்தங்களைச்சோதிப்பானே னென்னில்

உ—ம் அஞ்ஞானத்தினாலே சிவேஸ்வரானை வேறாகக்கண்டுவந்த பிராந்தானுக்கு அந்தபிராந்தி போகவேண்டுமென்று பதார்த்த சோதனைபண்ணிக் காட்டினதாம

ச—கை பதார்த்தசோதனையிலே யிருவரையுமொருவராய்க்காண்கிறதெப்படியென்னில்

உ—ம் உபாதி கற்பிதமாயிருக்கிற சலாகாசத்தையும் மேகாசத்தையும் விட்டு இதுகளுக்குத் திட்டானமாயிருக்கிற கடாகாசத்தையும் வகாசத்தையு மொன்றென்று காண்கிறாப்போலத்துற்பத தொம்பதங்களுக்கதிட்டானமான கூடத்தரும்பிரமமு மொன்றாகக்காண்கிறதே பதார்த்தசோதனையாம்

ச—கை இந்தப்படிக்குச் சாங்கியமததிற்குச் சிவனும் யோகமதத்திற்கு ஈசுரனும் இரண்டுபதங்களுக்கும் அர்த்தமாககலாமேயென்னில்.

உ—ம் அப்படியானால் வேதவிரோதிகளாயிருக்கிற மோகாயுதன் பரியந்தங்கூட்டலாம்.

ச—கை இந்தப்படிக்குச் சாங்கியயோகங்களிலே வேதாந்த விரோதமேதென்னில்.

உ—ம் ஆத்மா அநேகமென்பதுஞ்செகத்துமெய்யென்பதும் ஈஸ்வரரொருவருண்டென்பது மத்துவிதத்திற்கு விரோதம.

ச—கை அத்துவிதத்திலொத்துவரா விட்டாலென்ன சிவன் அசங்கசைதன்னியமென்றறிந்துகொண்டு மூத்தியில்லையோ வென்னில்.

உ—ம் செகத்தும் ஈச்சுரனும் நித்தியமென்றிருக்கையினாலே மோட்சம் வராது

ச—கை தான் அசங்கசைதன்னியமென்றறிந்தாலும் ஈஸ்வரனும்சிருஷ்டியுநித்தியமென்றது கொண்டிப்படிமோட்சம் வராதென்னில்.

உ—ம் முன்போலே பிரகிருதியுந் திரும்பவுங் கூடும் பின்பு இருக்கிற ஈஸ்வரனுக்குஞ் சிருஷ்டிபண்ணவா ஆசையால் மோட்ச மெப்படிவரும்,

ச—கை அசங்கதனாயிருக்கின்ற ஆத்மாவுக்கு அவிவேகத்தினாலே பிரகிருதியோடே சங்கம்வந்தது விவேகம்வந்தபிற்பாடு இவனெப்படி கூடுவனென்னில்

உ—ம் இப்படியானால் உன்னுடைய சித்தாந்தங்கெட்டு மாயா வாதத்தினாலே வேதாந்தத்திலேவிழுந்தது.

ச—கை, உம்முடைய அத்துவிதமதத்திற்கு ஆத்மாக்கள் நானாவிதமாகா தபோது இவன் முத்தன் இவன்பெத்தனென்கிற நிர்ணயமெப்படி யென்னில்

உ—ம் இந்தநிர்ணயமெல்லாம் மாயைதானேநிருவகிக்கும்

ச—கை ஆத்மாவென்றொழிய இரண்டில்லாத விடத்திலே மாயை தான் விகற்பத்தை எப்படிஸ்தாபித்திருக்குமென்னில்

உ—ம் கூடாததைக்கூட்டிவைக்கிறது மாயைக்குச் சுபாவமாகையினாலே எல்லாவற்றையுந்தாபிக்கும் சுபாவத்திலேபெந்தமுமில்லை முத்தியுமில்லை பெத்தனுமில்லை முத்தனுமில்லையென்றுவேதஞ் சொல்லுகின்றது,

ச—கை ஈதெல்லாஞ் சுபாவத்திலே யில்லாவிட்டால் பின்னையெதிலே கூடுமென்னில்

உ—ம் மாயையாகிற காமதேனுக்கு ஜீவேஸ்வரரென்று இரண்டுகன்றுண்டு அதுகள்வேணபடி தொய்துப்பால்கறக்குந் தத்துவ மொன்றொழியவிரண்டில்லை

ச—கை இப்படிபேதமெல்லாமித்தையென்றறிந்து திரிகாலத்திலும் ஆத்மாவொருவரேயுள்ள பொருளென்றறிந்திருக்கிற ஞானிகளும் விவகாரம்பண்ணக்கண்டோமே அதுகூடுமோவென்னில்

உ—ம் முன்போலே பரமார்த்தமாக விவகாரம்பண்ணார்கள் மித்தையென்றுகண்டுவருவார்கள்

ச—கை அஞ்ஞானிகளெப்படிவிவகரிப்பார்கள் ஞானிகளெப்படிவிவகரிப்பார்களென்னில்

உ—ம் அஞ்ஞானிகள் இகலோகவியாபாரமெல்லாம் உண்மையென்றும் அத்துவிதமில்லையென்றும் விவகரிப்பார்கள் ஞானிகள் அத்துவிதமாத்திரமுண்மையென்று மற்றுள்ளதெல்லாமில்லையென்றும் விவகரிப்பார்கள் இதில்அவரவர் நிர்ணயப்படிக்குப்பலமும்வரும்

ச—கை அத்துவிதம்பிரத்தியட்சமாமோவென்னில்

உ—ம் நீஞானவடிவாயிருக்கிறாயோ வில்லையோவென்றறி

ச—கை உள்ளபடிதோற்றவில்லையோவென்னில்

உ—ம் ஏகதேசங்காண்கிறது துவிதத்திலுஞ் சரியல்லவோ துவிதஞ்சித்திக்கிறபடிக்கு அத்துவிதமும்சித்தியாதோ

ச—கை துவிதமழிந்தல்லவோ அத்துவிதஞ்சித்திக்கவேண்டுமென்னில்,

உ—ம் துவிதமிருக்கையிலே துவிதத்தைக்காண்கிற வறிவாகற்றானே அத்துவிதவஸ்துஞ்சித்திக்கவேண்டும்

ச—கை ஞானம்வந்து மிரண்டுநிற்கின்றதுதானோவென்னில்

உ—ம் அவற்றையழித்து சாட்சிமாத்திரமாய் மிஞ்சுகிறபடியினாலே துவிதமாயாமயம் அத்துவிதமேநித்தியம்

ச—கை மறுபடியு மொருவேளையிலே துவிதஞ்சித்திய மாயிற்றோன்றினாலோவென்னில்

# பஞ்சதசப்பிரகரணம

உ—ம் மறுபடியும் அத்துவிதத்தைப் பரிகிர்ணயங்கள்பண்ணு

ச—கை எவ்வளவுகாலம நிர்ணயம்பண்ணவேண்டுமென்னில்

உ—ம் இந்ததுக்கத்தை துவிதத்திலே பண்ணும் அத்து விதங்களிலே பண்ணவேண்டாம்

ச-கை பசிதாகமுதலானது மெனக்குமுன்போலவே காண்பிக்கின்றதே தென்னில்

உ—ம், எனக்கென் கின்ற வகங்காரிக்கே யல்லாமல் சாட்சியாகிற நமக்கில்லை

ச—கை அப்பியாசத்தினாலே சித்துவடிவத்தினாலே காண்பிக்கிறதேதென்னில்

உ—ம இன்றுமுதல் அத்தியாசத்தைவிட்டு ஆத்மாவகங்காரங்களைவேறு கண்டிரு

ச—கை அத்தியாசஞ்சேடுதியில் வருகின்றது விவேகம் வரவில்லையேயெ ன்னில்

உ—ம் அத்தியாசம்போல விவேகந் தெரிந்திடப்படுவதினால் அத்பாசம்வராது

ச—கை துவித மித்தையாய்ப் போகிறதுபோலே அத்துவிதமு மித்தையாய்ப்போகதோ வென்னில்

உ—ம் இன்னபடி வரும் இன்னபடி போமென்று நிர்ணயப்படாமல் ாய மாயிருக்கிற நு துவிதமோ சைதன்னியமோ வென்று உன் அனுபோகத்தைப் பார்த்துக்கொள்

ச—கை துவிதம்போலத்துவிதமும் அனித்தியமோ வென்னில்

உ—ம் துவிதமுன்னில்லை யென்கிறதை அத்துவிதத்திலே கண்டதுபோலே அத்துவிதமபிறகு இல்லை என்கிறதை ஒன்றினாலேயுங் காணப்படாத படியினாலே அத்துவிதமே நித்தியம அதே அபரோட்சம்

ச—கை இபபடியறிந்தும சிலபோகள திருப்தியடைந்துகவலை கெட்டுச் சந்தோஷிபாத தேதோ வென்னில்

உ—ம சாஸ்த்திரத்தைத தனக் காக்கிக்கொண்டு விசேடித்து நம்பாமல் மேலெழுந்த வாரியாய்ப்பார்த்துக் கொண்ட படியினால்

ச—கை யாதொருக்கால் இருதயத்திலே யிருக்கிற ஆசையெல்லாம்பற்றவிட்டுப்போச்சுதோ அன்றல்லவோ அவன்முத்தனென்கிறவோரந்தம் அதுஞானியிடத்திற் காணோமே யென்னில்

உ—ம் அகங்காரத்தையும் ஆத்மாவையு மொன்றாகக் கண்டுகொண்டிருக்கிற ஆசையாகாதென்பதே அந்தவேதாந்தம் அகங்காரக்கிரந்தி விட்டபின்பு ஆத்மாவைபேறுண்டிருக்கிறவனுக்கு அகங்காரத்தினிடமாய்க்கோடியாசைவந்தாலும் ஆனியில்லை

ச—கை அகங்காரக்கிரந்தி விட்டுப்போனபின்பு அகங்காரத்தினிடமாய ஆசைவரலாமோ வென்னில்

உ—ம் பிராரத்த பலத்தினால்வரும்

ச—கை ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் பிராரத்தபலம் சரியானால் இரண்டுபேருக்கும பேதமேதென்னில்

உ—ம் இவன்வித்துவான் இவன்மூடனென்கிறதை வேதபரிட்சையினாலேகண்டு போகிறதேயல்லாமல் மற்றநடையினாலே காணாதவன்போலே அகங்காரக் கிரந்திவிட்டுப் போனதுகண்டு ஞானியென்றறிகிறதேயல்லாமல் பிராரத்தசேஷ்டையினாலே பேதந்தெரியாது.

ச—கை அகங்காரககிரந்தி போகாவிட்டாலும்ஆத்மாவுக்குச்சங்காரமில்லையென்னில்.

உ—ம் அப்படியறிந்தால் நீயேகிருதார்த்தன்,

ச—கை அகங்காரக்கிரந்திவிட்டுப் போனவனுக்கு அடையாளமெப்படியென்னில்.

உ—ம் பிரவிர்த்தி நிவிர்த்திகளிலே யொன்றைத் துவேஷிக்கிறதுமில்லையொன்றை வாஞ்சிக்கிறதுமில்லையென்கிற கீதாவசனப்படியேயிருப்பன்.

ச—கை ஆனாலும்பரிட்சைபண்ணுகிறதே ஞானமோவென்னில்;

உ—ம் கைகால்செத்துப்போனால் கருமத்திலுபேட்சைவரும் இப்படிவியாதியே தத்துவஞானமென்றால் உன்புத்தியல்லவோதெளிவு

ச—கை இப்படிசந்திக்கத் தேவையில்லையோ சடாபாதர்முதலானவர்யோடித்திரிந்தது புராணத்திற்கேட்டோமேயென்னில்

உ—ம் ஸ்திரீகள்வாகனங்களோடே கூடிவிளையாடினாலும் ஞானியானவன் னிசத்தைத்தானென்றெண்ணானென்று சாமவேதம்சொல்லும

ச—கை சடபாதர்காட்டிலேபோனது ஞானநிமித்தமல்லவோவென்னில்

உ—ம் அஞ்ஞானிகளுடைய சங்கத்தைத்துறந்ததேயல்லாமல் கல்லுகள்மரங்கள்போல பிரவிர்த்தியற்றுவிக்கருவில்லை

ச—கை இப்படியொவ்வொரு குணங்களைப்பிடித்து இதுவேஞானமென்றுரைத்தால் சொல்லுவானேனென்னில்.

உ—ம் சாத்திரசித்தாந்தவறியாதமூடன் ஒன்றுகிடக்கவொன்று சொல்லுவானன்றி அறிந்தவன்சொல்லான்

ச—கை சாத்திரசித்தாந்தந்தானேதென்னில்

உ—ம் சகலசன்மார்க்கமுங்கூடி வயிராக்கியமென்றும் உபாதியென்றும் ஞானமென்றும் மூன்றுவிதமாயிருக்கும இந்தமூவகைக்கும் ஏதுசொரூபங்காரியம்அவமதிபலம் என்கிறஐந்துவகை,வெவ்வேறாயிருக்கும் இதுகளை இன்னது இன்னபடியென்று பகுத்தறியாத அவிவேகியொன்றுதடுமாறிச்சொல்லுவன் பகுத்தறிந்தவன் அப்படிசொல்லான்

ச—கை வயிராக்கியமுதலான மூவகைக்கு அஞ்சவத்தையுமேதென்னில்

உ—ம் வயிராக்கியத்திற் கேது விடையத்திலே தோஷதிருஷ்டி சொரூப் ப்லக்காளம் காரியம் திரும்ப வுசைவறாமலிருக்கிறது அவதிபிரமலோ கபரியந்தந் துருமபாயென்னுதல் பலம்பிரமலோகம் வுபாதிக்கேது அட்டாங்கயோகம் சொரூபம் சித்தநிரோதம் காரியம்விவகாரட்சியம் அவம்கழுத்திபோலே செகத்தைபறைத்தல் பலம்பிரமசமீபம் ஞா னத்திற்கேதுசிரவணமனனமநிருந்தியாசனம் சொரூபம் விடயத்தில் மித்தியா பாவனைகாரியந்திரும்பி யொருக்காலும் அகங்காரமிரந்திவரா மலிருக்கிறது அவதிமூன்தேகம் நானென்கிற உறைப்புப்போல பிர மனென்கிற திடம்பலம் மோட்சம்.

ச—கை இந்தமூன்றும் ஒருமிக்கவேண்டாமோ வென்னில்

உ—ம் மூன்றுங்கூடிறைற் நிடசௌகரிய முண்டென்கிறதே யல்லாமல் மோட்சத்திற்கு ஞானமாத்திரமே போதுங் கன்மவசத்தினால் சிலரிட த்திலிருக்கும் சிலரிடத்திலிராது கலக்கதத்தேவையில்லை

ச—கை இப்படிகலக்கமணிலைநின்றவனுக்குச்செய்காரியமேதென்னில்.

உ—ம் சின்மாத்திரமாயிருக்கிற தன்னிடத்திலே மாயைகற்பித்த செகச் சித்திரத்தை யபேட்சித்து எந்நேரமுஞ்சின்மாதரமே தானாகக்காண்ப னஉண்மையென்று மயாகான்:

இந்தச் சித்திரதீபிகையை அனுசந்தானம்பண்ணி வருகிறவன் செக த்தைச் சித்திரமாகத் தன்னிடத்திற்கண்டு மோட்சத்தை யடைவன்

இச்சித்திரதீபிகை முற்றுப்பெற்றது.



உ

இரண்டாவது

# திர்ப்திதீபிகை.

சகலலோகங்களுக்கும் சகலவேதாந்தத்தையும் வெளிபண்ணினவனு ம் யாருக்கும்அறியப்படாத புருடார்த்தத்தைப் பூரிவிட்ட வித்யாரணிய சுவாமிகள் புருஷனவன் ஆத்மாவையிவனென்றறிந்தால் பின்னையாரு க்குப் போகநிமித்தியமாய் எந்தப்போகத்தைவேண்டிச்சரீரதாபப்படுவ தென்கிற பிரகதாரண்ணியவுபநிஷதார்த்தத்தை அருளிச்செய்கின்றார்

சங்கை இந்தவுபநிடதத்தை சொல்லுகிறதென்னில்

உத்தரம் சித்ரதீபிகையிலே சொன்னபடிசெகத்துவித்தையென்றுமுண் மையான சின்மாத்ரமேநானென்றும் திடப்பட்டவன்முத்தனுடை யதிர்ப்திகதியைச்சொல்லுகின்றது.

ச—கை இந்த வேதத்திலே புருடனென்கிற சொல்லுக்கர்த்த மேதென்னில்

உ—ம சுபாவத்திலே சிர்கைதசிர வேருபொருளில்லா விட்டாலும்விவகாரத்திலே மாயாகற்பித மாகச சிவனென்றும் மீசுர னென்று மிரண்டுபேருண்டு அதிற்பாரவை முதறபிரவே சாந்தமானசிருட்டி முதலானதைச்செயகிறவ னீசுரன் சாக்கிர முதல் மோட் ச பரியந்த மான சங்காரம் கிருவங்க்கிரவன இதிலதிட்டான சைதன்னியத்தோடேகூட்டிசசிவனேயபுரு னென்று சொல்லுகிறது

ச—கை அதிகாரியைசசொல்லுகிற விருட்சத்துக்கு அதிட்டானத்தையுங்கூட்டி அர்த்தமாககலாமோவென்னில்

உ—ம் அதிட்டானத்தைதசிரயாரோபத்திற்குவேறே சொரூபமில்லாதபடியினலும்விவகாரத்திலேயிருவரு மொருவராகத்தோறுறு வகயினலுமுத்தியிலேயாரோமுமதிட்டான மாத்திர மாய்ப்போகிறபடியினலுமஇரண்டையுமகூட்டிச்சொன்னேம

ச—கை இந்தப்புருடன் அதிட்டானப்பிரதானமாயெப்படிபேசுவன்யாரோ பப்பிரதானமாயெப்படி பேசுவனென்னில்

உ—ம் அதிட்டானமாரோபததிலே யடங்கியிருக்குங்காலத்திலே ஒருமைப்பாடாய் நான் சகாரியேன்றே பேசுவான் யாரோபததைதன்னியதிட்டானத்தைத் தானயக்காணும்போது நான் அசங்கசின்மாத்திரனென்றே பேசுவன்

ச—கை நான்அசஙகனென்னும்போது அசங்கவிட த்திலேயகங்காரங்கூடுமோவென்னில்

உ—ம் முக்கியம் அமுக்கியம் முக்கியாமுக்கியம் என்றுமூன்றுண்டு இதில்அதிட்டான வகங்காரங்களைப பகுத்துக்காணுதமுடன் நான்வந்தேன்போனேனென்று சுதாபாசனுகபேசுவன் அதிட்டான வகங்காரங்களைப் பகுத்துக்கண்ட ஞானிமேறசொன்ன விரண்டையுஙகழித்து முக்கியா முக்கியத்துடனேகூடிநான் அசங்கன்சின்மாத்திரனென்றுபேசுவன் ஏதனல் முக்திக்குஹானி விருத்தியில்லை.

ச—கை அஞ்ஞானியென்னு மிருவர்களுஞ் சிதாபாசனல்லவோஇவர்களில் ஞானி தனக்குஅன்னியராயிருக்கிற சாட்சியை நானென்னக்கூடுமோவென்னில்

உ—ம் முகஆசாபாசத்திற்குக் கண்ணாடியிலேயிருக்கிற முகஞ்சுபாவமல்ல அதைப்பார்க்கிற முகமேசுபாவம இப்படிபோலே சிதாபாசனுயிருக்கிறதுமித்தையானபடியினலும் சாட்சியாக மிஞ்சுகிறதேசுபாவமான படியினலும் தன்னுடைய சுபாவசைதன்னியததை நானெனக்கூடும்

ச—கை இப்படிசிதாபாசன் மித்தையானல் அவன்அனுஷ்டானம்பண்ணுகிற ஞானமுமித்தையாகவேண்டுமது சங்காரத்தைப் போக்கமாட்டாதேயென்னில்

உ—ம் இந்தஞானமித்தையானுலுமிதுபோலே சிதாபாசனுக்கு முன்னி ருந்தசங்காரமும் பொய்ப்பானபடியினுலே அதைப்போக்கஇந்தஞான மேபோதும

ச—கை புருஷசத்தக்கிற்கர்த்தக்கேட்டோம் இனியாத்மாவையிவரோ நா னென்றறிகிறதெப்படியென்னில்

உ—ம் சந்தேகவிபரீதமறத் தேகமேதானென்றிருந்தாப்போலசாட்சியே தானென்றறிகிறசட்டோ சொல்பிரத்தியட்சத்தையல்லவோசொல்லுகி றது அவாசைகத்திற்குப்பரோட்சமாயிருக்கக் கூடுமோவென்னில்

உ—ம் பத்தாவனுக்குத்தன்னிடத்திலேதானே அஞ்ஞானம்ஆவரணம்வி ட்சேபம்பரோட்சஞானம அபரோட்சஞானம்துக்கநிவர்த்திதடையற் றவானந்தமென்கிற ஏழவத்தையுங்கண்டாப்போல ஆத்துமாவினிடத் திலும் இந்தவழவத்தையுங்கூடும்

ச—கை தசமனிடத்திலும் ஆத்மாவினிடத்திலுமிந்த ஏழவத்தை அனு போகமாகக்காட்டவேண்டுமென்னில்

உ—ம் தசமனென்பதுபேனாயும் எண்ணினவுடனே பத்தாவானைக்கா ணுமல்திகைத்துக்கலங்கினதே அஞ்ஞானம் பத்தாவானைக்காணோம் அவனெங்கேயோ வென்கிறபாராமரிசமேயாவரணம் ஆன்றேடே போ னுனென்றழுகிறதே விட்சேபம் ஆப்தனுபதேசத்தினுலே சொற்கா திலோகம்போல பத்தாவானிருக்கிறுனென்றறிகிறதேபரோட்சஞான ம் நீதானேபத்தாவானென்று ஆப்தனெண்ணிகாட்டவறிந்தவரோ அப ரோட்சஞானம் முன்செய்தானென்றழுத வழுகைபோனதே துக்கநி வர்த்திபத்தாவானைச்சாகாமற்கண்டசந்தோஷமே தடையற்றவானந்த ம் இதுபோலநிஷ்டாந்தத்திற்சிதாபாசன் அநாதிசங்காரத்தில்அழுந்தி த்தன்னுடையசுபாவத்தை விசாரியாமலுபேட்சித்திருக்கிறதேவஞ்ஞா னம், அம்மார்க்கத்திலேவிசாரித்து ஆத்மாவுண்டாறைற்ருேற்ருரோ ஆ கையினுல்சரீரத்தையுஞ் சிதாபாசனேயுந்தானாகக்காண்கிறதேவிட்சேப ம்ஆப்தனுபதேசத்தினுல்பிரமமுண்டென்கிற பரோட்சஞானம்வேதா ந்தவிசாரத்திலே பிரம்மநானென்றறிகிறதே யபரோட்சஞானம்நான்க ர்த்தாபோக்தாவல்லவென்று போனதே துக்கநிவர்த்திசெய்யவேண்டி னதெல்லாஞ்செய்ததுமுடிந்தது அடையவேண்டினது யடைந்ததுமு டிந்ததென்கிற சந்தோஷமேதடையற்றவானந்த மிப்படிச்சிதாபாசனு க்குஏழவத்தையமுண்டு

ச—கை இதிலேபந்தப்படுத்துகிற வவத்தையெது மோக்ஷத்தைக்கொடு கிறவவத்தையேதென்னில்

உ—ம் முந்தினமூன்றும்பந்தத்தைக்கொடுக்கும் பிந்தினநான்கும்மோட்ச த்தைக்கொடுக்கும்

ச—கை முந்தினமூன்றுக்குள்ளேயெந்தெந்த வவத்தை யெந்தவனர்த்தை ப்பண்ணுமென்னில்

உ—ம் வாத்மாவைநானறியேனென்கிறயுதாசினமே யஞ்ஞானத்தில்வந்த வனர்த்தம் கூடத்தரிருந்தாற் றோற்றுறேவில்லையென்கிற விபரீதமே யாவரணத்தில் வந்தவனர்த்தமிகலோகபர லோகத்தைக்குறித்துச் செய்காரியமெல்லாம் நம்முடைய தொழில்தானே புண்ணியபாவபலமும் நம்மைவிடாதென்கிற நடுக்கமே விட்சேபத்தில் வந்தவனர்த்தம்இப்படி யிந்தமூன்றுமனர்த்தந்தரும்.

ச—கை அஞ்ஞானமுமாவரணம்விட்சேபத்திற்கு முந்தினதானபடியால் ஏழுவத்தையுஞ் சிதாபாசனுக்கென்றுசொல்லக் கூடாதேயென்னில்

உ—ம் விட்சேபங்காரியமாகிறதற்குமுன்னுங் காரணரூபமாய் பிரமத்தினிடத்திலேயிருந்தது அந்தச்சிதர்பாசனிடமாய் முந்தின இரண்டவத்தையும் வாகனரூபமாயிருந்த தானகயினால் ஏழுவத்தையுஞ் சிதாபாசனுக்கல்லாமல் வாத்மாவுக்கில்லை

ச—கை பூர்வாசாரிகளெல்லாரும அஞ்ஞானத்திற்காதாரஞ்சிதாபாசமென்றுசொல்லாமல் பிரமமென்று சொல்லுவானேனென்னில்.

உ—ம் யாரோபதத்திற்கதிட்டானம் பிரமமானபடியினாலே எல்லாப்பிரமத்திலாரோபனென்று சொன்னார்கள் நாமனுபவத்தினாலே யவத்தையெல்லாஞ் சிதாபாசனுக்கென்று சொன்னோம்.

ச—கை இநதவழுவத்தையுஞ் சிதாபாசனிடத்திலே யனுபவமெப்படியென்னில்.

உ—ம் நான்சங்காரிநான்பரோட்சஞானி நான் அபரோட்சஞானி நான் துக்கமற்றவன் நான்கிருதகிர்த்தியனென்கிற விட்சேபமுதலான அஞ்சவத்தையுஞ் சிதாபாசனபிமானிக்கக் கண்டதுபோலநான் அஞ்ஞானியென்திருஷ்டியிலே பிரமமில்லையென்கிற முந்தின இரண்டவத்தையுஞ் சிதாபாசனேயனுபவிக்க அனுபோகங்கண்டோம்.

ச—கை இனி நாலவத்தையு முத்திதருமென்கிறதெப்படியெனில்.

உ—ம் பரோட்சஞானத்தினால்அசத்தாவரணமும்அபரோட்சஞானத்தினால் அபசித்தாவரணமும் மூலஞானத்துடனே நட்டமாய்ப்போனபின்பு பிரமமேநானென்று வெட்டவெளியாயத் தோற்றுகையினாலேயாரோபிக்கப்பட்ட சிவத்துவம் நட்டமாயப்போனவுடனே கர்த்தத்துவமுதலான சகலதுக்கமும்விட்டுப்போய் சகலசங்காரமும் நிவர்த்தியானபடியினால் காம்கித்தியமுத்தனென்கிற கொர்பிரங்கொண்டு தடையற்ற வானந்தம்வரும் இப்படி நாலவததையு மோட்சங்கொடுக்கின்றவடைவு.

ச—கை பிரமம் சுயம்பிரகாசமானால் பரோட்சஞானவிடயமாயெப்படியிருந்ததென்னில்.

உ—ம் பிரமமுண்டென்று பிரகாசிக்கையினால் குற்றமில்லை

ச—கை சுயமபிரகாசமானால் தானாய்விளக்கவேண்டுமல்லாமல் பிரமமுண்டென்று விளக்கவாவதேது ஆகையினால் அந்தப்பரோட்சஞானம பிரமாணமேயல்லவேயென்னில்

உ—ம முந்தினகின்னையாத்திற்கு அழிவுவந்தது கொண்டும் கண்ணாரக்காணாததுகொண்டு தாறுமாறாய்க் கேட்டது கொண்டும ஏகதேசங்கண்டதுகொண்டும் இந்தநாலுவகைகொண்டு பரோட்சஞானம் அப்பிரமாணமாகவேண்டும் அந்தப்பரோட்சஞானத்திற்கிந்த நாலுவகையுமில்லை

ச—கை இந்தப் பரோட்சஞானத்திற்கு நாலுதூஷணமில்லை யென்கிறதெப்படியென்னில்

உ—ம் பிரமமில்லையென்றொரு பிரமாணக்காரணகபாடியினாலே முந்தின நிர்ணயத்திற் கழிவில்லையென்பது கண்ணாரக காணாததுகொண்டு பரோட்சஞானம அப்பிரமாணமென்றால் சொற்சாக்ஞானமும் அப்பிரமாணமாகவேணும பிரத்தியட்சமாப்போகிறதை பரோட்சமென்பது கொண்டுபிராந்தியென்னக்கூடாது ஏகதேசங்கண்டதுகொண்டு அப்பிரமாணமென்றாற் கடஞானமுதலாகப் பிராந்தியாகவேணும் இப்படியபரோட்ச ஞானத்திற்கொரு தூஷணமுமில்லை

ச—கை நிரங்கிசவஸ்துவிலே அங்கிசகற்பனை யெப்படியென்னில்

உ—ம், தன்னைப்புத்தியில்லாவிட்டாலும தள்ளப்படுகிற உபாதியைப் பற்றி அங்கிசகற்பனையுண்டு

ச—கை உபாதியைப்பற்றி யெப்படியுண்டென்னில்

உ—ம் பரோட்சஞானத்தினாலே யசத்தென்கிற அங்கிசந்தள்ளப்பட்டது பிரத்தியட்ச ஞானத்தினால் அசத்தென்கிற அங்கிசந்தளளப்பட்டது

ச—கை பிரத்தியட்சஞானத்திற் காணியில்லையோவென்னில்

உ—ம் பத்தாவான்தானென்று கண்டபிற்பாடு முன்கண்டவொன்பதுபே நக்குள்ளே யில்லையென்று கண்டாற்போல ஆதமாவேபிரமமெனறுகண்டபின்பு முன்றொய்வழங்கின அகங்காரத்தைத் தானல்லவென்னறுதள்ளுமேயல்லாமல் நான்பிரமமெனகிற பிரததியட்சஞானததைக்கெடுக்கமாட்டாது

ச—கை இப்படி முந்திபரோட்சஞானம் அவாந்திரவாக்கியத்தினாலே வாறென்றும் பின்புமகாவாக்கிய விசாரததினாலே பிரத்தியட்சஞானமவருமென்றும் எங்கேசொல்லியிருக்கிறதென்னில்

உ—ம உத்தாலகர்சுவகேதுவுக்கு முந்திப்பரோட்சஞானஞ்சொல்லியிருக்கிறதுஷன்பதாநதரம பிரத்தியட்ச ஞானஞ்சொனனென்று சாமவேத

த்தினுடைய வருணனன்பிருதுவக்கு மூக்திப்பரோட்சஞானஞ்சொல்லிப்பின்பு அஞ்சாநதரதகிலேபிரத்தியட்ச ஞானஞ்சொன்னனென்றுரசுலர்வேதத்திலும் தேவேந்திரன் மூந்திரவாக்கியத்தினாலே பிரமத்தைபரோட்சமாயறிந்து அபரோட்சமாகக் கண்டானென்று ருக்கு வேதத்திலுஞ்சொல்லியிருக்கிறது இந்தப்படி யாசாரியசுவாமிகளும வாக்கியவிருத்தியிலே வெளிப்பண்ணியிருக்கின்றது

ச—கை மகாவாக்கிய விசாரத்தினுலபரோட்சஞானம் வருமென்கிறது வாக்கியவிருத்தியில் எப்படிவெளிப்பண்ணியிருக்கின்ற தென்னில்,

உ—ம அகங்காரமுங்கூடஸ்தரும் தொமபதத்திற்கர்த்தமென்றும் பரோட்சமாய மாயாவுபாதியிருக்கிற செகத்காரண ஈஸ்வரனும்பிரமமுந்தற்பதத்திற் கர்த்தமென்றும் இரண்டுக்கும் விருத்தம்வந்தவிடத்திலே அவனேயிவன் இவனேயவனென்கிற லட்சணையினாலே கூடஸ்தரோபிரமம் பிரமமே கூடஸ்தனென்றறிந்தவுடனே இதுவரைக்குநாம்பிரமமல்லவென்கிற யுக்தியும ஈஸ்வரனைதன்னியம் பரோட்சமெனகிற புத்தியும இன்னவிடமென்று காணுமலேயடிப்போம் ஆகையால் அபரோட்சஞானத்திற்கு மகாவாக்கியமேகாரணம்

ச—கை வாக்கியத்தினாலே பிறந்தவறிவெல்லாம் பரோட்சமேயொழிய பிரத்தியட்சமல்லவேயென்னில்

உ—ம வட்டிக்காசைப்பட்டுமுதலிழந்தா னென்கிறசொற்போலப் பிரமமாக இரண்டொன்றென்னனிசிவனுக்குச்சுதசித்தமாயிருந்தபிரததியட்சமும் பே மெனகிறது பரியாசமாய்க்காணும்நீயேதசமனென்கிற சொல் அவனைபிரததியட்சமாய்க காட்டவில்லையோ

ச—கை அநதக்கரணவுபாதி யிருக்கையினாலே சிவன்பிரத்தியட்சமாகவாம நிருபாதியாயிருக்கிற பிரமம்பிரத்தியட்ச மாகாதேயென்னில்

உ—ம் இருப்புபொன்னென்கிறதுகொண்டு விலங்கென்கிறதுபோகாததுபோல அந்தக்கரணகூட்டரவுசிவவுபாதியாப்போல அதைத்தவிர்கிறதே பிரமவுபாதியாம்

ச—கை நானென்கிறது தள்ளப்பட்டபின்புநான்பிரமமென்கிறஞானம் வரக்கணக்கில்லையேயென்னில்

உ—ம நானென்கிறது முற்றுந்தள்ளப்படாமல் உபாதிமாத்திரந்தள்ளப்பட்டு சைதன்னியந் தள்ளப்படாதபடியினாலே நான்பிரமமென்கிற அறிவுவரலாம

ச—கை சாட்சிசுயம்பிரகாசமானல் விருத்திக்குவிடயமாகக்கூடாது கூடுமெனறாலும் பிரமம்விருத்தியில் சிதாபாசனாலுமறியப்பட்டுச் சடமென்று வருப்பதுமேயென்னில்

உ—ம சடத்தைப்பார்க்க விளக்குங் கண்ணும்வேணும் விளக்கைப்பார்க்கக கண்மாத்திரமபோதும் அதுபோல அப்பிரகாசமான பிரம





ஐந்தாவது

# மகாவாக்கியவிவேகம்

வித்தியாரண்ணிய சுவாமிகள் லோகோபகாரமாய் மகாவாக்கியஞ் சொல்லுகின்றார்.

ச—கை மகாவாக்கிய மென்பதெத்தனை அந்தவாக்கியத்துக்கர்த்தமே தென்னில்

உ—ம் நான்குவேதங்களிலு முடிந்தபொருளைச்சொல்லுகின்ற நாலுவாக்கியமும் மகாவாக்கிய மென்றுசொல்லப்படுமஞானவடிவாயிருக்கிறதே பிரமமென்றும இருக்குவேதஞ்சொல்கிறது நானேயந்தப்பிரமமென்றும்எசுர்வேதஞ்சொல்கிறது நீயுமதுவேயென்று சாமவேதஞ்சொல்கிறது இந்தஆத்துமாவேபிரமமென்று அதாவணவேதஞ்சொல்கிறது இதுவேமகாவாக்கியத்திற் கர்த்தம்

ச—கை இருக்குவேதத்தில் சொன்ன அர்த்த மெங்கேயிருக்கிறதென்னில்

உ—ம் யாதொருஅறிவினால்சத்தமுதலான ஐந்துவிடையங்களையுமறியப்படுகிறது அந்தப்போதமேபிரமம

ச—கை இப்படிக்கொத்தஅர்த்தம்எத்தனையுண்டென்னில்

உ—ம் மும்மூர்த்திகள்முதலானதேவதைகளிடத்திலும்மனுஷர்பசுக்கள் முதலான விடங்களிலுஞ் சைதன்னியமாயிருக்கிற அர்த்தமொன்றேயொழியவிரண்டில்லை

ச—கை இப்படி முந்தினவாக்கியத்தினால் ஞானம்வருப்பற்றால்மற்ற மூன்று வாக்கியத்திற்குஅர்த்தமேதென்னில்

உ—ம் பரிபூரணமாயிருக்கிற பரமான்மாவேஇந்தத்தேகத்திலேபுத்திசாட்சியாயிருக்கிறசைதன்னியமஇந்ததாலுயிருக்கிறபிரமந்தானே அகமென்று எசுர்வேதஞ்சொல்லுகின்றதுசீவனுடைய தேகேந்திரியாதிகளுக்கப்பாற் பட்டிருக்கிற வஸ்துஇந்தப்பிரம்மமானபடியால் நீயேசெகத்காரண பிரம்மமென்றுசாமவேதஞ்சொல்லுகின்ற திப்படிச்சுயம்பிரகாசமாயிருக்கப்பட்ட ஆத்மாதானே அர்த்தமல்லாமல்வேறொன்றர்த்தமல்லவென்று அதாவணவேதஞ்சொல்லுகிறது

இப்படிமகாவாக்கியவிவேகம்பண்ணினவன்

போகஷேத்தையடைவான்

மகாவாக்கியவிவேகம்-முற்றிற்று.



௨

ஆனந்தபஞ்சகத்தில்-முதலாவது

# யோகானந்தம்.

---

வித்தியாரண்ணியசுவாமிகள் லோகோபகாரமாய்த் தீபிகாபஞ்சகம் விவேகபஞ்சகமாகப் பத்துப்பிரகரணஞ்சொல்லியதுகளிற்சொன்னபடி அர்த்தத்தைப் பகுத்தறிந்தவனுக்குச் சகலதுக்கமும்போய் தடையற்றவானந்தம் வருமென்பதை ஆனந்தபஞ்சகத்திலே வெளியிடத்துடங்கி முந்தி யோகானந்தஞ் சொல்லுகின்றார்.

ச—ங்கை ஞானத்தினாலிந்த விதமானபிரயோசனமுமுண்டென்கிறதற்குப் பிரமாணமேது அந்தஞானத்தை பெற்றவிதமெது சகம்ஜிதையடைந்தவரார் எப்படியடைந்தார்கள் அடைகிறவிதமெது நிலையானந்தமாயிருக்குமென்னில்

உ—ம் பிரமவித்துபரத்தையடைந்தவன் ஆத்மஞானி சகலசோகமுங்கடப்பன் பிரமஞானம்பெற்ற சிலனுக்கேயனந்த மறைவனுக்கில்லை சகலத்தையுந்தானாய்க் கண்டவனுக்கேபயம்போய அத்துவிதமாயக் கண்டவனுக்கேபயம் பிரமானந்தத்தையறிந்தால் ஒருக்காலுமொன்றுக்கு பீதமாயும் பயமில்லை ஞானியையாகாமக்கினி கிட்டாது பிரமத்தையறிந்தவுடனே சகலபாபமுங்கெடும் பரத்தையறிந்தால் இருதயக்கிரந்தியும் சகலசந்தேகங்களும் வெந்துபோம் ஞானிக்கொருக்காலுமொரு சொன்னகுறைகளில்லை பிரமத்தையறிந்தவன் பிரமமேயாவனென்று இப்படிமுழங்குகிற வேதபுராணங்களெல்லாம் பிரமானந்தம் வித்தியானந்தம் விஷயானந்த ஞானானந்தமென்று மூன்றுவிதமாயிருக்கும் முன்வருணனை சொல்லக்கேட்டுப்பிறகு இந்தநிலைபெற்றார் சனற்குமாரரிடத்திலும் நாரதர்பெற்றார் சகலரும் ஆனந்தத்திற்பிறந்து ஆனந்தத்திலிருந்து ஆனந்த மாத்திரமாய் இருக்கையினால் நாமே அத்துவிதமானந்தமென்கிறவழியாக அடைந்தார்கள் திரிபுடியில்லாதபடியினால் பிரமமேயானந்தம்

ச—ங்கை திரிபுடியாவதேது திரிபுடியெப்படி சுகமில்லையென்னில்

உ—ம் விஞ்ஞானமயமென்கிற ஞாதிருவும் மனோமயமென்கிற ஞானமும் விஷயங்களென்கிறஞேயமும் திரிபுடியென்பது விஷங்கலந்த தேன்போல் இந்தத் திரிபுடியிலே வருகிறவிஷயசுகமாயிருந்து துக்கத்தோடேகூடினதுகொண்டு சுகமல்ல

ச—ங்கை அத்துவிதத்திலெப்படி திரிபுடியில்லையென்னில்

உ—ம் பூர்வோத்தரபக்கத்திற்கு முன்னங்கண்டானந்த யானந்தசமாதிசுழுத்தி முதலானதைப்போலே திரிபுடியற்றிருக்கும்

ச—கை வேதாந்தமெல்லாம் படித்தால்போதுமோவென்னில்

உ—ம் அர்த்தமறிந்தாலொழியபோதாது

ச—கை விருபத்திஞலே அர்த்தம்பார்த்துக்கொண்டால்போதாதோவென்னில்

உ—ம் சாட்சாத்காரம்வந்தாலொழியபோதாது

ச—கை இனியெப்போது சாட்சாத்காரம்வருமென்னில்

உ—ம் கிருதார்த்தனுகுமளவுங் குருவையுபாசித்தால்வரும்

ச—கை குருவையுபாசித்தாலெப்படிவருமென்னில்

உ—ம் அவர்விடயமிசித்த மூன்னிலையில்வருகிற வானந்தங்களையும்விடயமொழிந்தபின்பு அந்தர்முகவிருத்தியில் பிரதிபலிக்கிற ஆனந்தங்களையும் உன்னுடைய சுபாவஆனந்தவாசனையல்லாமல் வேறல்லவென்றுகாணச்சொல்லி யுபதேசிப்பார்

ச—கை சுபாவானந்தமாவது பிரதிபிம்பானந்தத்தையும் வாசனுனந்தத்தையும் எப்படிசெனிப்பிக்கிறதென்னில்

உ—ம் சுருதியுத்தி அனுபவத்தினுல் தான்பிரமானந்தமென்கிறது சுபாவசித்தமாயிருந்தாலும் அவிட்டத்தில் பிரதிபிம்பானந்தமாகிய ஆனந்தமயன் இருதயத்தைவிட்டு கண்டத்தில்வந்து சொற்பனத்தில் விஞ்ஞானமயனாவன் நேத்திரத்தில்வந்து சாக்கிரத்தில் காச்சினஇரும்புவுண்டைபோல்தேகமெல்லாங்கலந்து நின்றுஉதாசினன் சுகதுக்கியென்று மூவகையாயிருப்பன் இதில்சுகதுக்கமிரண்டும்கர்மகாரியம் உதாசினந்தான் சுபாவமாயிருக்கிறது

ச—கை சுகதுக்கமெத்தனை விதம்இரண்டு மற்றிச்சும்மாயிருக்கிற வேளையில்லதுதோறறுமென்னில்

உ—ம பாக்கியபோகனென்று மனோராச்சியமென்றுசுகதுக்க மிரண்டுவிதமாயிருக்கும்இதினுடைய இடைநடுவில் எனக்கொருசிந்தனைகளுமில்லைசுகமாயிருக்கிறேனென்று எல்லாருஞ்சொல்லுகையினுல் ஆத்மசுபாவமானந்தமென்கிறதற்குச்சந்தேகமில்லை,

ச—கை தன்னுடையசுபாவானந்தம் இதுதானுவென்னில்

உ—ம் நீர்நுக்கிறகுடத்தைத்தொட்டவுடனேகாண்பிக்கிற குளிர்ச்சிதண்ணீராகாவிட்டாலும் அதுகொண்டு குடத்தில் தண்ணீருண்டென்கிறதுப்போல வுதாசினவேளையில் காண்பிக்கிற சுபாவானந்தத்தின்வாசனை

ச—கை அப்படியானுல்சுபாவானந்தம் எப்போதுதோற்றுமெனில்

உ—ம் பிரமஅப்பியாசத்தினுல் அகங்காரத்தைமறக்க பிரமானந்தசுபாவம்வெட்டவெளியாம் அகங்காரம் கன்றாகமறந்தால் நித்திரையிருக்கிறபடியினுல்நித்திரையுமல்லபிராரத்தமிருக்கிறபடியினுல் தேகமூம்விழாது

பன் கையெடுக்கிறபின்சற்றுச்சற்றுவைத்து இளைப்பாறுகிறப்போல் சிறுகச்சிறுகமரித்து இந்திரியங்களைச்சமாதியிலே இளைப்பாற்றுவன் அனுசந்தானத்திற்கு விரோதியாய்வந்தவிடயானந்தமும்நெருப்பிலேதள்ளுகிறப்போலத்தோற்றும்

ச—கை பிரமாணசந்தானமும் பிரபஞ்சவியாபாரமும் ஒருமனதிற்குச் செயயக்கூடாதேயென்னில்

உ—ம் ஞானியினுடையமனது காக்கைக்கண்போல் இரண்டிடத்திலும் போக்குவரத்தாயிருக்கும்

ச—கை சமாதியில்வருகிற பிரமானந்தத்தையும் அதில்பிரதிபந்தமானவிடயானந்தத்தையு மறியப்பெற்றஞானியெப்படியிருப்பானென்னில்

உ—ம் இரண்டுபாஷையுமறிந்தவனைப்போல் இருவகையானந்தத்தையுங் கண்டுபொசித்துக்களிப்பான்

இப்படி யோகானந்தத்தை அனுசந்தானம் பண்ணினவன் கிருதகிருத்தியனாவான்

யோகானந்தம் - முற்றிற்று



௨

இரண்டாவது

# ஆத்மானந்தம்.

யாதொருத்தனுடைய அனுக்கிரகத்தாலே வேதமாகவழங்குகிறது யாதொருத்தர் வேதத்திற்சகலபேதத்தையுமுண்டாக்கினர் அவருக்கு நமஸ்காரம்பண்ணி வித்தியாரணிய சுவாமிகள் லோகோபகாரமாய் அருளிச்செய்கின்றார்

ச—கை யோகியானவன் யோகத்தினால் தன்னுடைய சுவாபானந்தத்தை யறியட்டும் இனிமூடனாயிருக்கிறவனுக்குக்கெதியேதென்னில்

உ—ம் கன்மாகன்மவசத்தினால் லட்சஞ்சனனமெடுப்பன்

ச—கை இப்படித்தள்ளிவிடலாமோ எல்லாரிடத்திலும் தயவுபண்ணத் தேவையில்லையோவென்னில்

உ—ம் காமையோவென்றால் பிரயோசனமேது வக்தாவுடன் பகிர்முகனோ அந்தர்முகனோவென்றுகண்டுகொண்டு அவனுக்கேற்றஉபதேசம பண்ணவேண்டும்

ச—கை இந்தவிருவகையில் எவனுக்கு எதையுபதேசம் பண்ணுகிறதென்னில்

உ—ம் பகிர்முகனாயிருக்கிற மூடனுக்குக் கிரமபாசனைகளை யுபதேசிக்கவேண்டும் அந்தர்முகனாயிருக்கிறவனுக்கு ஆத்மானந்தமார்க்கத்தில் ஞானத்தையுபதேசிக்கவேண்டும்

ச—கை இப்படிவருகிற சிநேகம் எத்தனைவிதமாய்ச் சொல்லப்படு மென்னில

உ—ம பொன்முதலானவிடயத்தில் ஆசையென்றும் கர்மவுபாசனையில் சிரத்தையென்றும் கிடையாதவஸ்துவிலிச்சையென்றும குருதேவதை களிடத்தில் பத்தியென்றும நாலுவிதமாய்ச் சொல்லப்படுவா

ச—கை இந்த விடயங்களிலிருக்கிற பிரீதிபோல் ஆத்மாவிடத்திலும ஒரு பிரீதியிருக்கிறது அதுங்காண்டிவிடயபபிரியமல்ல வென்பானேனெ ன்னில்

உ—ம் ஒருவிடயத்தைவிட்டு ஒருவிடயத்தை நாடுகிறதுபோல் ஆத்மா வைகளைவிடாதபடியினால் ஆத்மாவே யானந்தம பறறதெலலாமானந் தமல்ல

ச—கை வாஞ்சைதுவேஷம் இரண்டிக்குமிடமற்றவரோ யாத்மாவானல் திட்டாங்கசமிபோல வுபேட்சைக்கிடமாறுமென்னில்

உ—ம் உபேட்சிக்கிறவனுடைய சொரூபமானபடியினல் உபேட்சைக்கு விடயமல்ல ஆதமா

ச—கை வியாதிகோபங்களாலேமூடப்பட்டவன் ஆத்மதியாகமபண்ண நினைக்கிறபடியினல் ஆதமாதுவேஷத்திற்கு விடயமாகப்படுமேயென் னில்

உ—ம் துவேஷிககயோக்கியமானதேகத்தை துவேஷிக்கிறானேயல்லாமல் துவேஷிககிறவனையிருக்கிற தன்னைததுவேஷிககககூடாது

ச—கை இப்படியிருவகைககும் விடயமாகாதஆத்மாபிரியத்திற்குத்தான் விடயமாகட்டுமென்னில்

உ—ம் பிதாவுககுப்புததிரன்தானே சகலபந்துக்களிலும் பிரியவஸ்துவா யிருககிறதுபோல ஆதமாவைக்குறித்தே சகலவிடயமும்பிரியமானபடி யினல் அதிறபிரியமானவஸ்து ஆத்துமாவல்லாமல் விடயமல்ல

ச—கை இப்படியதிற்பிரியமானவஸ்து ஆத்மாவானல்ஆத்மாதானேபிள் ளையாகுமென்கிறவேதத்திலும இவன்பண்ணினபுண்ணியத்தில்ஆத் மாதானே பிள்ளையாகுமென்றும பிள்ளையில்லாதவனுக்கு கெதியில் லையென்றுஞ் சொல்லுகையினல்புததிரன்தானே யாதமாவாகட்டுமெ ன்னில்

உ—ம கவுணத்மாவென்றும் மித்தையாத்மாவென்றும்முக்கிய ஆத்மாவெ ன்றும மூன்றுவகைகளுலவொருவகையில் ஒவ்வொருஆதமாபிரதானமா யிருகதும புததிரனை ஆதமாவென்கிறது ஒருவகையில்லாமல் முககிய மல்ல

ச—கை இந்தமூன்றுவகை ஆத்மாவாகச் சொல்லப்பட்டதேது எதினலே யொதஆத்மாமுககியமாம் இதுகளைவகையுடனே சொல்லுமென்னில்

உ—ம் இந்த புருடனைச் சிங்கமென்பதுபோலப் பிள்ளையை யாத்மாவெ ன்கிறதுகெவணம் கட்டைகைய களானென்கிறதுபோலப்பஞ்சகோ

ச—ங்கை. தகப்பனுக்குப்பின் அந்தவாதீனத்திலிருந்து பொசிக்கமாட்டாத சாட்சியையாத்மாவென்கிறது செவ்வையல்ல பாடும்பழியும் ஒருணமூர்ந்தனதாகவொப்புக்கொண்டு பொசிக்கிறபுத்திரனேயாத்மாவாகவேண்டும் இவனுக்குமேற்பிரிய வஸ்துவு மில்லையென்னில்

உ—ம், முன்சொன்னவிவேகமெல்லாம விட்டுப்போட்டுத்திரும்பியுமிப்படி சங்கித்தவனைச் சிட்டனேப்ரதிவாதியோ வென்றறிந்து இருகைக்குமேல் உத்தரஞ்சொல்லவேண்டும் அஃதெப்படி யென்றால் சிட்டனுக்கு சொல்லுகிற உத்தரமபிள்ளைவருகிறதற்கு முன்னும் பிள்ளையென்று துக்கம் கோபத்தில் வந்தாலும விழுந்துபோமென்று துக்கம்கிர்ணயப்பட்டாலும் பெற்றும்பிழைத்தா னல்லவோவென்று துக்கம்பிறந்தபோதும் கண்கள்பறவைநோதமுதலானதால்துக்கம்குமாரனுனூட்டியினாலே துக்கம்பூண நாலிட்டால் படிக்கிறானேயில்லையோவென்று துக்கம்வித்துவனானால் வெட்டிக்கவேண்டுமென்று துக்கம்எவ்வனம்வர்தால் பரதாரகமனம்பண்ணுகிறானென்று துக்கம்குடும்பியானால் தரித்திரப்படுகிறானென்று துக்கம்அவன் தனவானானால்காம்காணுமற்செத்துப்போகிறானென்று துக்கம் இப்படி புத்திரனால் முற்றுந்துக்கந்தானேப்ரதிவாதிக்குச்சொல்லுகிறதுசாபந்தான்

ச—ங்கை இவர்சபித்தால் ப்ரதிவாதிக்கானியேதென்னில்

உ—ம் ப்ரமவித்தாயிருக்கிறவன் ப்ரமசொரூபமானபடியினால்சிட்டனுக்கும் ப்ரதிவாதிக்கும்அவர்பண்ணின வனுக்ரகமும்நிக்ரகமும்அந்தப்படியேபலிக்குமென்கிற யுத்தியினாலும் ப்ரமவித்துக்களை விஷமசங்கைபண்ணினவன் ஆயிரஞ்சதுர்யுகம் ரவுரவாதிநரகத்தில் கிடப்பனென்கிற புராணவசத்தினாலும் ப்ரதிவாதிக்கு அனர்த்தம்வரும்

ச—ங்கை இப்படிசித்தாந்த மேதாயிற்றென்னில்

உ—ம் இப்பொதுசொன்னபடி பகுத்தறிந்து சாட்சியாயிருக்கிறதானே சகத்திலும் பிரியவஸ்துவென்று வாத்தமானந்தத்தில் எக்கோமுங்களித்திருக்கிறவனுக்கே முத்தியென்றுசித்தாந்தம்

ச—ங்கை இந்த ஆத்மாவுக்குச் சைதன்னியம்போல் சுகமுஞ்சுபாவமேயானால் அந்தக்கரணவிருத்திகளில் சித்துமாத்திரந்தோன்றி யானந்தந்தோன்றாமலிருப்பானேனென்னில்

உ—ம் உஷ்ணமும் ப்ரகாசமுஞ் சுபாவமாயிருக்கிற வக்கினியினுடைய உஷ்ணந் தண்ணீரிலும் ப்ரகாசம் விறகிலும்பிரிந்து காண்கிறாப்போலவும் தாமரைப்பூவுச் சுபாவமாயிருக்கிற ரூபரசகெந்தங்கள் ஒவ்வொரு விந்திரியத்தில் ஒவ்வொரு குணமே தோற்றுகிறுப்

போலவும் ஆத்மாவினுடைய சித்தானந்தங்களும் ஒவ்வொரு விருத்தியில் ஒவ்வொரு சுபாவந்தோன்றும்

ச—கை எந்தவிருத்தியிலெந்தச்சுபாவந்தோற்றுமென்னில்

உ—ம் நிர்மலமாகவிருக்கிற சாத்விகவிருத்தியில் ஆத்மாவினுடைய சித்தும் ஆனந்தமுந்தோற்றும் மலினமாயிருக்கிற ராசதவிருத்தியில் ஆனந்தந்தோற்றாது தாமதவிருத்தியில் சித்துந்தோற்றாது

ச—கை இப்படிக்கொத்த ஆத்மானந்தத்தை முந்தினவத்தியாயத்திற்சொன்ன யோகமன்றியில் இந்தவத்தியாயத்திற் சொன்னவிவேகத்தினால் தான்சாதிக்கப்படுமோ இதில்பிரமாணமேதென்னில்

உ—ம் யோகத்தினால்யாதொரு பிரமமடையப்பட்டது ஞானத்தினாலும் அதுவேயாத்மானந்தமாக வெளிப்பட்டது இதற்குப்பிரமாணஞ் சாங்கியத்தினால் அடையப்படுகிறபதம் யோகத்தினாலுமடையலாமென்கிற கீதாவசனமே பிரமாணம்

ச—கை சாங்கியம்யோகமென்று இருவகையாய்ப் பகுத்துச்சொல்லுவானேன் இரண்டுபேருக்கும் பலன்சரியாய வருவானேனென்னில்

உ—ம் ஒருத்தருக்கு யோகமெளிதாயிருக்கும் ஒருத்தருக்கு ஞானவிசாரமெளிதாயிருக்குமென்கிறதை மனதில்கொண்டு கிருஷ்ணபகவானிரண்டுவழியுஞ்சொன்னார் யோகிஞானியென்கிற இருவருக்குஞ்சின்மாத்திரமென்கிற ஞானமும் ராகத்துவேஷமில்லாமையும் சமமாத்தையாச்சிக்கிறதுவும் பிரதியோகியாயிருக்கிற தேகாதிகளிலநித்தியாநந்தமாகிறதுஞ் சரியானபடியினால் மோட்சமேசரியாகவரும்

ச—கை தொய்தமெல்லாந்தோற்றுகையினால் அதெப்படி புருஷார்த்தமாயிருக்குமென்னில்

உ—ம் புத்திக்கேற்றத்தொய்தமேயில்லையென்றுபோகத்தக்கயோசித அத்துவிதானந்தமென்கிற மேலத்தியாயத்தில் வெளியிடுகிறோம்

எங்கேயாவது இந்த ஆத்மானந்தத்தை யனுசந்தானம் பண்ணிக்கொண்டு பிரபஞ்சத்தை மாயாமயமென்கிறவன் காரியத்தினால்போகியுமாவன் எளிதாகவுமோட்சமடைகிறதும்

ஆத்மானந்தம்-முற்றிற்று.



௨

மூன்றாவது

# அத்துவிதானந்தம்.

வித்தியாரண்யசுவாமிகள் எளிதில் அத்துவிதானந்தம் அருளிச்செய்கின்றார்.

ச—கை முத்திச்சொல்லப்பட்ட யோகானந்தந்தான் ஆத்மானந்தமாகட்டும் தொய்தத்தோடே கூடியிருக்கிறவருகதுப் பிரமமெப்படிசித்திக்குமென்னில்

உ—ம் ஆகாசமுதலாகத்தன்னுடைய தேகபரியந்தமுள்ளசெகத்தெல்லாந்தனக்கு பாதானகாரணமாயிருக்கிற வானந்தத்தில் தோற்றியானந்தத்திலிருந்து ஆனந்தத்தில் லயமாகிறபடியினால் மண்ணைத்தவிர கடமில்லையென்கிறபோல வானந்தத்தைத்தவிர வேறல்லவென்று வேதஞ்சொன்னபடியினால் அத்துவிதம பிரமமென்கிறதுகூடும்

ச—கை குயவனாலுண்டாக்கப்பட்ட கடங்குயவனாலுண்டாகுதென்கிறப்போல் செகத்துக்குப்பிரமம நிமித்தக்காரணமாகட்டுமென்னில்

உ—ம் மண்ணைவிட்டுக் கடங்காணாததுபோலப் பிரமத்தைவிட்டுச் செகத்திராதபடியினால் நிமித்தகாரணமென்னக்கூடாது உபாதானகாரணமேயாகவேண்டும

ச—கை காரணத்தில்நின்று செகத்துண்டானது ஆரம்பமாகவோபரிணாமமாகவோவென்னில்

உ—ம் விவர்த்தமாகவோரும் வேறுபட்டிருக்கக் கண்டாப்போல்காரணத்தைவிட்டுக்காரியம் வேறுபட்டுக காணாதபடியினால் நிரம்சிவஸ்துவிலாரம் பட்சங்கூடாது பால்தயிராறுப்போலக் காரணந்தன்னுருககெட்டு வேற்றுருவாகாதபடியினால் பரிணாமபட்சமுங்கூடாது பழுதை பாமபாகத்தே சுற்றுகிறப்போல் எங்குந்தன்னுருககெடாமல்வேற்றுருவைப்போலத் தோற்றுவையினால் விவர்பட்சமேதென்னில் சித்தாந்தம்.

ச—கை நிரம்சிசவஸ்து விவர்த்தந்தானுங்கூடாதென்னில்

உ—ம் நிரம்சிசமாயிருக்கிற வாகாசத்தில் தலமீலாதிகளைக் கற்பிக்கிறப்போல் நிரம்சிசமாயிருக்கிறபிரமத்திலுஞ் செகத்துவிவர்த்தமென்பதுகூடும்

ச—கை அசங்கமாயிருக்கிற பிரபஞ்சசெகத்தை எப்படிசிருஷ்டிக்குமென்னில்

உ—ம் இந்திரஜாலக்காரனிடத்தி லிருக்கிறமாயை யிந்திரசாலத்தைக்கற்பிக்கிறப்போலப் பிரமத்தினிடத்தில் ஒருமாயாசத்தியுண்டு அதுவேசெகத்தைக்கற்பிக்கின்றது

ச—கை மாயாசத்தியொன்றுண்டென்கிறதால் அத்துவிதங்கெட்டுதென்னில்

உ—ம் அந்தசத்தியும் பிரமத்தைத்தவிரவேறல்ல ஆகையினால் அத்துவிதத்திற்கானியில்லை

ச—கை அப்படியானாலந்த சத்தியுமில்லையென்னில்

உ—ம் காரியங்கண்டபடியினாலந்தச்சத்தியுண்டு

ச—கை இந்தஅசங்கதம் எங்கேயாகிலுங் கண்டதுண்டோவெனில்

உ—ம் அக்கினியிருக்கிறதாகசத்தி அக்கினிதானாகவும் மணிமந்திரங்களினால் அக்கினிக்கன்னியமாகவுங் காணவில்லையோ

ச—கை இப்படிபிரமமுமல்ல பிரமத்தைத்தவிரவுமல்லவென்கிறமாயாசத்தியுண்டென்கிறதற்குப்பிரமாணமேதென்னில்

உ—ம் அனந்தசத்திபிரமத்துக்குண்டென்கிற வேதமும்வாசிஷ்டமும் பிரமாணம்

ச—கை வாசிஷ்டத்திலெப்படிசொல்லியிருக்கின்றதென்னில்

உ—ம் வாரீர்ரகுநாதனேபிரமபீடத்தில் அந்தசத்தியுண்டு அந்தவனந்த சத்தியினால்பிரமந்தானே பிரபஞ்சமாகத்தோற்றுகின்றது சரீரங்களில் சிற்சத்தியும் வாயுவில்சலனசத்தியும் கல்லில்கடினசத்தியும் ஜலத்தில் சிதசத்தியும் அக்கினியில் உஷ்ணசத்தியும் இதுமுதலானவனந்தசத்தியும் பிரமவிடத்திற்காரியத்தினால் காண்பிக்கிறதென்றுஞ் சிருஷ்டிக்கு முன் இந்தச் சத்தி முளையின் பரமாயிருக்கிறாப்போலவுஞ் சூட்சமாயவிதையில் மரமிருக்கிறாப்போலவுங் காணப்படாமல் பிரமத்திலிருந்ததென்றும் தேசகாலவிசித்திரத்தினால் பூமியில்பயிர்கள் முளைக்கிறாப்போலப்பிரமத்திற்சத்தியும் ஒவ்வொருக்கால்செகத்தென்கிறகாரிய ரூபமாய்விளங்குமென்றும ஆதியில்மனதுண்டாச்சுது பின்புபெந்தமுண்டாச்சுது பின்பு ஆகாசசிருஷ்டியுண்டாச்சுதென்கிற க்ரமமெல்லாம் பாலகாக்ஞானம்போல் மூணுக்குச்சொன்னதேயல்லாமலுண்மையல்லவென்றுசொன்னார் பின்புபாலகாக்ஞானமாவதேதென்று கேட்டராமனுக்கு வசிஷ்டர்சொன்னது அசத்தென்கிற பட்டணத்தில்மூன்றுராசகுமாரருண்டு இரண்டுபேர் இனிமேற் பிறக்கப்போறார்கள் ஒருத்தர் இனிமேல் கெர்ப்பத்தில் வரப்போகிறார் புண்ணியவானயிருக்கிற இந்தமூன்று ராசாக்களும் வேட்டைக்குப்போனவிடத்தில் ஆகாசத்திலே நல்லதோப்பிருக்கிறதென்று ஊமைசொல்லக்கேட்டு ஆகாசத்தில்போய்த்தோப்பைக்கண்டார்கள் அவ்விடத்தில் முயற்கொம்பைவெட்டிச் சிங்காதனமாக்கிக்கொண்டு இனிமேல்வரப்போகிற பட்டணத்தில் இன்றைக்குப்பிரவேசித்தார்களென்று மலடிப்பால்தாதிசொன்ன வசனத்தைக்கேட்டு விசாரம [illegible] தயுமெய்யென்றே நம்பினும் இந்தச்சமுசாரகற்பனையும் விசாரமில்லாதமூடனுக்குண்மைபோல் சொல்லியிருக்கிறதென்று இதுமுதலான உபாக்கியானத்தோடேமாயாசத்தியினுடைய விஸ்தாரத்தை வசிஷ்டர் ரகுநாதருக்குச் சொன்னார் அந்தமாயாசத்தியைத் தானேநாமும் நிரூபிக்கிறோம்,

ச—கை மாயாசத்திக்கு லட்சணமேதென்னில்

உ—ம் காரியத்திற்கும் ஆகாரத்திற்கும் விலட்சணமாயிருக்கும்

ச—கை காரியமென்பதேது ஆகாரமென்பதேது சத்தியினுடைய இதற்குவில லட்சணமென்பதெப்படி இம்மூன்றையும் ஒருதிட்டாந்தத்தில்பகுத்துக்காட்டுமென்னில்

உ—ம் வாய்குவிந்து பண்டியுண்டாயிருக்கிறகடமே காரியமென்பது ஐந்துகுணமுமுடைய மண்தானேயாதாரமென்பது கடசத்தி இந்தவிரண்டு லட்சணமுமில்லாமலிருக்கும்

ச—கை இரண்டு லட்சணமுமில்லாதசத்தியை யெப்படியிருக்குமென்றறிகிறதென்னில்

உ—ம் அநிர்வசனமென்றறி

ச—கை இந்தக்கடசத்தியின்னபடியென்று கூறப்படாதபடியினால் அது வேயில்லையென்னில்

உ—ம் காரியாரம்பத்திற்குமுன் இந்தச்சத்தி தனக்காதாரமாயிருக்கிற மண்ணுக்குள்ளொளித்திருந்து நிமித்தகாரணமாயிருக்கிறகுலாலதிகள்சகாயமாய்வந்து கூடினவுடனே விகாரமாயிருக்கிற கடவடிவையடைந்து தனக்காதாரமாயிருக்கிற மண்ணுக்கு மண்ணென்கிற பேரைமாற்றிக் கடமென்கிறதினால் சத்தியில்லையென்னக்கூடாது

ச—கை மண்ணிற்சத்தி காரியமாகிறதற்குக குலான்வேண்டினாப்போல் பரமத்திறசத்தி செகத்தாகிறதற்கு நிமித்தகாரணமாரென்னில்

உ—ம் கடசத்தியுடைத்தான் மண்செடமானபடியினால் சைதன்னியனாயிருக்கிற குலாலன்வேண்டிற்று மாயாசத்தியுடைத்தான் பிரபஞ்சசைதன்னியமானபடியினால் வேறேநிமித்தகாரணங்கேட்கவேயில்லை

ச—கை மண்ணென்றுஞ் சத்தியென்றும் அதின்விகாரங்கடமென்றும் லோகத்திலொருவருஞ் சொல்லக்காணோமே எல்லாவறையுங் கூடிச்சடமென்றே சொல்லுகிறார்கள் அதிலகாரணமேதென்னில்

உ—ம் விசாரியாத அஞ்ஞானமேகாரணம்

ச—கை விசாரமாவதேது விசாரித்தவன் எதைக்கடமென்னெனில்

உ—ம் குலாலன்வியாபாரத்திற்குமுன் மண்ணென்கிறபேரோ வழங்குகிறபடியினால் கடசத்தத்திற்கு மண்ணர்த்தமல்ல குலாலவியாபாரத்திற்குப்பின்சடமென்றுவழங்கின பாண்டமும்மண்ணைத்தவிர இல்லாதபடியினால் கடசத்திற்கர்த்தம் மண்ணைத்தவிரவுமல்லவென்று பார்க்கிறதேவிசாரம் இப்படிவிசாரித்தவன் கடசத்தியைப்போலே யனிர்வசனமானபடியினால் அந்தச்சத்தியின்காரியமென்றறிவன்

ச—கை அனிர்வசனத்தைச்சத்தியென்று சொல்லவேண்டுமேயல்லாமல் கடமென்று நிருவகிக்கிறதெப்படியென்னில்

உ—ம் இந்திரசாலக்காரரிடத்திற் சத்திகாண்பியாதபோது மாயையென்றுங் காண்பிக்கிறபோது கந்தர்வசேனையென்றுஞ் சொல்லப்

படுகிறுப்போல் மண்ணிற்சத்தியுங்காரியமாய்க்காண்பியாதபோதுசத்தியென்றுங்காண்பித்தபோது கடமென்றுஞ் சொல்லப்படும்

ச—கை இந்தவுக்திக்குப் பிரமாணமுண்டோ வென்னில்

உ—ம் இப்படிமாயாமயமா யிருக்கிறதென்று வாக்கினல் சொல்லுகிறது மாத்திரமேயல்லாமல் அத்தமில்லையென்றும நிவிகாரமாயிருக்கிறமண் மாத்திரமேபொருளென்றும வேதஞ்சொல்லுகின்றது

ச—கை ஒருகாலத்தில் சத்தியென்றும ஒருகாலத்தில்காரியமென்றுங் காண்பிக்கிறதடஞ் சத்தியென்று அங்கிகரியாவிட்டால் விவகாரமெப்படிகூடுமென்னில்

உ—ம் இருவகைக்குமாதாரமா யிருக்கிறமண்ணை விடாதிருந்தபடியினல் வியாபாரங்கூடும மண்ணைவிடுத்துப் பார்த்தால் வாக்குமாத்திரமேயல்லாமல் இரண்டுகாலத்திலு மொருபடித்தா யிருக்கிறமண்போல் பொருளாகாது

ச—கை விகாரமென்றுங்கடமென்றுஞ்சொல்லப்பட்டபொருளேபொய்யானல் மண்ணென்றறிந்தவுடன் ஏன்காணுமற்போக வில்லையென்னில்

உ—ம் விகாரபொருளுமல்ல வுண்மையு மல்லவென்று காணப்பட்டதே தோற்றுமற்போனது

ச—கை காரியம் பொய்யென் றறிந்துகொண்டு பிரயோசனமேது காணுமற்போகவேண்டாமோ வென்னில்

உ—ம் புருஷன் தண்ணீருக்குள்ளே தலைகீழாகத்தோற்றினலும் அவனில்லைபொயயென்றறிகிறது போலக்காரியந்தோற்றினலும் பொய்யென்றறிந்ததேயில்லையென்று போனதுகாணுமற் போகிறதல்ல அத்துவிதவாதிகளுக்கு இப்படிக்கொத்த அறிவுதானே புருஷாலத்தம்

ச—கை இந்தப்படிக்கு செகத்தையும் பொய்யென்று ஊன்றிப்பார்க்களங்கேயாகிலுஞ் சொல்லியிருக்கின்றதோ வென்னில்

உ—ம் மண்பொன் இரும்பென்று மூன்றுதிட்டாந்தமுங்காரிய மெல்லதுலாம் பொய்யென்று பகுததறிகிறதுஞ்சாயவேதத்திற்சொல்லியிருக்கிறது

ச—கை கம்பூஷணம்சத்தியென்று பரிணமித்தது விவர்த்தத்திற் கெப்படிதிட்டாந்த மாகுமென்னில்

உ—ம் பால்தயி ரானதுபோல் பரிணமிக்கபபட்டுப் போகாமல்மண்முதலானது திரும்பியறிந்தால் காரணரூப மாயிருக்கையினல் வவிவர்த்தத்திற்குத் திட்டாந்தமாய்ச் சொல்லலாம்

ச—கை இக்தப்படிகமிச் சகத்தையேசாகக்காணவேண்டுமெனில்

உ—ம காரியமெல்லாங் காரணமாகவே காணவேண்டும்

ச—கை சத்தியத்தை யறிகிறவிடத்தில் அசத்தியமென்கிற வறிவுஎப்படிவருமென்னில்

உ—ம மண்ணென் றறிகிறவிடத்தில் விகாரம்அசத்திய மென்றறிகிறுப்போல

ச—கை மண்ணென்றேசுத்கா யறிடவேண்டும் விகாரத்தை யேன்மறக்க வேண்டுமென்னில்

உ—ம் உள்ளத்தை யுள்ளபடி பார்க்கிறதே புருஷார்த்தம் இல்லாததை யுண்டென்று பாற்கிறதேயானர்த்தம்

ச—கை ஆனால்சகலபிரபஞ்சத்தையுஞ் சோதித்துப்பார்க்க வேண்டுமெ ன்னில்

உ—ம் ஒருகடத்தைமண்ணென்றறிந்துகொண்டால் உலகத்திலுண்டான பாண்டமெல்லாம் மண்ணென்று வகுப்பற்றாப்போல் ஒருவிடயத்தி லூன்றிப்பார்த்து பிரமமென்றறிந்தால் சகலபிரபஞ்சமும் பிரமமென் றுவகுப்பறும்

ச—கை பிரமத்திற்கு லட்சணமேதெனில்

உ—ம் சத்துசித்து ஆனந்தமூன்றும் பிரமலட்சணம் நாமரூபமிரண்டுஞ் சகலட்சணம்

ச—கை கடதிட்டாந்தத்தைப்போல் இவிடத்திலுஞ்சத்தியின்னது சத்தி க்காதாரமின்னது சத்தியின்காரியமான விகாரமின்னதென்று பகுத் துக்காட்டுமென்னில்

உ—ம் இன்னபடியென்று நிர்ணயிக்கப்படாதமாயைதானேசத்திபிரமந் தானே சத்திக்காதாரம் நிருவிகாரமாயிருக்கிற பிரமத்தினிடத்தில்கற் பிக்கப்பட்ட நாமரூபந்தானே சத்தியின்காரியமான விகாரம்

ச—கை இம்மாயையெந்தவடிவில் விகாரத்தையடைந்ததெனில்

உ—ம் திருஷ்டிக்குமுன் இன்னதென்று காணப்படாமல் அவ்வியாகிரு தமாயிருந்த இந்தமாயை மூந்த மூதவாகாச மென்கிற விகாரத்தைய டைந்தது

ச—கை கடவிகாரத்திற்குமண்ணே சுவரூபமாய்க் காணப்பட்டாப்போ ல ஆகாசவிகாரத்திற்கும் பிரமசொரூபமென்கிறதைப் பகுத்துக்கா ட்டவேண்டு மென்னில்

உ—ம் அஸ்திபாதிபிரயதத்தைத்தவிர அவகாசமென்கிறரூபத்திற்கும்ஆ காசமென்கிறநாமத்திற்குஞ் சொரூபமில்லாதபடியினால்நாமரூபஞ்சி ருஷ்டியிலுண்டாய்ப் பிரளயத்திலழிகிறது கொண்டு இந்தவிரண்டையி த்தையென்றும் மண்போலச் சச்சிதானந்த மெப்போதும் நிலைபெற்றி ருக்கையினால்பிரபஞ்ச சத்தியமென்றும் பகுத்தறி

ச—கை ஆகாசத்திற்குப் பின்தினவிகாரங்களேது அதில்சச்சிதா னந்தத் தைக்காண்ப தெப்படியென்னில்

உ—ம் வாயுவுஅக்கினியும் பிருதிவியோஷதிகள் அன்னம்புருடன் தே காதிகளெல்லாம் விகாரமென்பதெப்படி இப்படி வெகுவிதமாயிருக்க ப்பட்ட நாமரூபங்களெல்லாஞ் சச்சிதானந்தத்தைவிட்டுக் காணாதப டியினால் இத்தனையுஞ் சச்சிதா னந்தமென்கிற கிலேசந்தேகமில்லை

ச—கை சச்சிதானந்தத்தை விடாதிருக்கிறபடியினால் நாமரூபமும் நித்தி யமாகட்டுமென்னில்

உ—ம உற்றுப்பார்த்தால் இல்லாதநாமரூபங்கள் சத்தியமாயிராமல் பிரமத்தினிடத்தில் தோற்றியழிந்து போகிறதுவிவேகம பண்ணியனுபவித்துக்கொள்

ச—கை எப்படிவிவேகம பண்ணிப்பார்க்கிறதென்னில்

உ—ம அலைநுரைகள சமுத்திரத்திலுண்டாயச சமுத்திரத்திலிருந்து சமுத்திரத்தில் லயமாகுவதுபோல

ச—கை இப்படிபார்த்தாலும் நாமரூபமிருக்கிறது அதுபோகிறதற்கு உபாயமேதென்னில்

உ—ம் வறியிறறுருமபுபோல் நாமரூபக்தைக கூர்மையாய்பாராமல் அவமதிப்புபண்ணிப்போட்டுப்பாககுமதினசயெல்லாஞசசிதானந்தமாய ஆதரவோடேபாாதது இநதப்படிநெடுங்கால நிரந்தரமாதரவோடே கூடஅறிவிகக்றபோதுநாமரூபம இனனவிடமென்று காணுமறபோய் அத்துவிதநிலைகிடைப்பட்டுச சீவன்முத்தனுவான்

ச—கை நாமரூபமபொய்யெனகிற தெதினுல்கிடைப்பமென்னில்

ச—கை நாமரூபததைககண்டவுடனே பண்ணிசசத்தி யனேகமபொய்களைசசிருஷ்டித்தாபோலவுமசித்திரசத்தியானதுகூடாதசொறபனஙகளைச் சிருஷ்டித்தாப்போலவும் பிரமனிடத்தில் மாயைசிருஷ்டிததது பொயயல்லவோ இத்தனையுமென்று எககோரமுமபாாத்து அதிசயப்பட்டால் நாமரூபமபொயயென்று கிடைப்படும சித்தினாயெப்படி கூடாதசொற்பனத்தைசசிருஷ்டிககிறதென்னில்

உ—ம சொறபனத்திலே தான் ஆகாசததில்பறக்கவுந் தன்தலையைத்தூக்கிப்போகவும ஒருநாழிகைக்குள அனேகமவருஷமவாநதுபோகவும செததுபோன புததிராதிகள் திருமபிவந்திருக்கவுங காணகிறதெல்லாங் கூடாதகாரியமல்லவோ

ச—கை இதனுல்பிரமவிகாரததிலே தாசசுதென்னில்

உ—ம சித்தினாககேசததியுண்டானுல் மாயாசததியானது நிர்விகாரமாயிருக்கிற பிரமததினிடத்தில்செடஙகளசிதாபாசாளென்கிறவிகாரங்களைக கறபிககிறது அதிசயமல்ல

ச—கை இந்தவிகாரமுமபிரமமுஙகலநது கோறறுகிறவிடத்தில் ஒன்றுசத்தியமும ஒன்றுமித்தையுமாகப பாாககிறதெப்படியெனனில்

உ—ம் எங்குஞ்சரியாயிருக்கிற புடவைசத்தியமென்றும் அதில்தனித்தனி யே காண்பிக்கிற சித்திரமிதனையென்றும் அறிகிறாப்போல் எங்குஞ் சரியாகத்தோற்றுகிற சச்சிதானந்தத்தைச் சத்தியமென்று அதில்தனித் தனியேதோற்றுகிற நாமரூபத்தையென்றுங்கண்டு உபேட்சிக்கவேண் டும்

ச—கை தொழிலுடன்பட்டவனே தானாகத்தோற்றுகையினால் தன்னைய சங்கனென்றறிகிறதெப்படியென்னில்

உ—ம் கிணற்றிலே தலைகீழாய்த் தோற்றுகிலும் அதைத்தானல்லவென்று தள்ளிகரைமேலிருக்கிற தன்னைத்தானென்று சந்தேகமறப்பார்க்கிறாப் போல் மூன்றவத்தையிலுங் கர்த்தாவாய்த் திரிகிற தன்னைத்தானல்ல வென்றுபேட்சித்து இதற்குசாட்சியாயிருக்கிற சித்தைத்தானேதானெ ன்றுசந்தேக மறக்கண்டிருக்கவேண்டும்

ச—கை மனதிலாவேசமாய் மூண்டிருக்கிறபிரபஞ்சகாரியத்தையுபேட் சைபண்ணுகிறதெப்படி யென்னில்

உ—ம் க்ஷணத்துக்கொருக்கால் வெவ்வேறாய்வருகிற மனோராச்சியத்தை ச் சகலருமம்பட்டிலேயுபேட்சிக்கிறாப்போல வாலிபத்திலெவ்வன ம்பாராமல் எவ்வனத்தில்வார்த்திகம் வேண்டுமென்றும் வாராமல்தோ றுஞ்செத்தவனை யின்றைக்குவாவென்றாலும் வாராமல்மனோராச்சிய மபோலெங்ஙனே கண்டது அங்ஙனேயழிந்துபோகிறபடியினால்நாமரூ பந்தோற்றினாலும்பொய்யென்றே யுபேட்சிக்கவேண்டும்

ச—கை இப்படிசர்வாத்மனும் பிரபஞ்சத்தையுபேட்சிக்கச்சொன்னால்ச ரீரநிருவாகமெப்படி நடக்குமென்னில்

உ—ம் கூத்தாடிபோலேவாசனை தானேநிருவகிக்கும்

ச—கை ஒருக்கால் பாலனென்றும் கிழவனென்றும் நானாவித மாகவழங் குகிறதே தானாககாண்பிக்கிறபடியினால் தானேகரீதியாயிருக்கிற சைத ன்னியமென்கிறதுமனதிலெப்படிதிடப்படுமென்னில்

உ—ம் வெவ்வேறாஜலப்பிரவாகமெடுத்தாலும் நடுவிலிருக்கிற பெருங்க ல்லு அசையாததுபோல நாமரூபங்கள் வெவ்வேறாபரிபாகப்பட்டா லு மேகரீதியாயிருக்கிற சின்மாத்திரமே நாமென்றறியவேண்டும்

ச—கை இந்தப்பாவனை முதிர்ந்தாலிலயெப்படியிருக்குமென்னில்

உ—ம் கண்ணாடியில்தோற்றினபட்டணம்போல சச்சிதானந்தத்தில் செ கத்துகாணும்

ச—கை நாமரூபமல்லவோ மூந்தித்தோற்றுகிறது அதை யுபேட்சிக்கிற தெப்படியென்னில்

உ—ம் கண்ணாடியைக்கணுமல்பிரதிவிம்பந் தோற்றுதுபோலச் சச்சிதானந்தந்தோற்றுமல்பிரதிவிம்பந் தோறமாட்டாது ஆகையினால் முந்திதோற்றுகிறசச்சிதானந்தத்தைப் பார்த்துமேல் நாமரூபத்தில்புத்தியைநாட்டாமல் நிறுத்தினால் அடைப்பட்டதுவிதமாக அத்துவிதப்பிரமநிலைதானாகமிஞ்சும் இந்தநிலையில் தானேயெல்லாரும்நின்றுவிளைப்பாறினார்கள்

இப்படி அத்விதானந்த விவேகம்பண்ணினவன்பிரமஞானியாவான்

அத்துவிதானந்தம்-முற்றிற்று.

——(*)——



உ

நான்காவது

# வித்தியானந்தம்.

வித்தியாரண்ணிய சுவாமிகள் யோகாநந்தத்தினாலும் ஆத்மானந்தத்தினாலும் அத்துவிதானந்தத்தினாலும் பிரமானந்தம்பெற்றவனுடையவித்தியானந்தத்தை நிரூபித்தருளுகின்றார்

ச—கை வித்தியானந்தமாவதேது அது யெத்தனைவிதமா யிருக்குமென்னில்

உ—ம் விஷையானந்தம்போலே வித்தியானந்தம் அந்தக்கரணவிருத்திரூபமாயிருக்கும் அது துக்கநிவர்த்தியென்றுங் காமியலாபமென்றுங்கிருதகிருத்யமென்றும் அடையவேண்டியதெல்லாமடைந்த சந்தோஷமென்று நாலுவிதமாயிருக்கும்

ச—கை துக்கமெத்தனைவிதம அதுஞானத்தினாலெப்படி போயிற்றுகாமியலாபம் எத்தனைவிதம்ஞானத்தினாலதுஎப்படியடைப்பட்டது கிருதகிருத்யம்யெத்தனைவிதம் அதுஞானம்வந்ததுகொண்டு எப்படிசெய்துமுடிந்தாயிற்று அடையப்போகிறபுருஷார்த்தமேது அதுஞானத்தினால் எப்படியடையப்பட்டதென்னில்

உ—ம் இகலோகதுக்கமென்றும் பரலோகதுக்கமென்றும் இரண்டுவிதமாயிருக்கும் ஆத்மாவேநாமென்றறிந்தால்போசிக்கிறவனில்லாமற்போ

திறபடியினாலும் நாமரூபம்பொய்யென்றறிந்தால் போக்கியமில்லாதபடியினாலும் போகபோக்கியங்களைக் குறித்துவருகிற இகலோகதுக்கம் போயிற்றுதாமரையிலையில் தண்ணீரொட்டாது அதுபோலஞானியை ஆகாமியகருமம்பற்றாதபடியினாலும் அக்கினியிலிட்டபஞ்சுபோல் ஞானிக்குச்சஞ்சிதகர்மம் வெந்துபோனபடியினாலும் புண்ணியபாவசித்தனைபாய்வருகிறபரலோகதுக்கம் போயிறதென்றுதுக்கநிவர்த்தி சொல்லப்பட்டதுகாமியம்பதினொருவிதமுண்டு அதெப்படியென்னில் அழகிளமையுடையவனாய் அரோகதிடகாத்திரமாய்ப் பஞ்சாசத்கோடி பூமண்டலமுமாளுகிறவனைக்கிழாசாண்டுபொசிக்கிறதுஒருமனுஷியானந்தம்இந்தக்கிறமத்தில் புண்ணிய பரிபாகத்தினால் நூறத்தனையதிகம்மனுஷகந்தர்வானந்தம்அதில் நூறத்தனையதிக தேவகந்தர்வனானந்தம்அதில்நூறத்தனையதிகம் பிதிர்த்ததேவானந்தம் அதில்நூறுகொண்டது கற்பாதியில்தேவனாய்ப்பிறந்த ஒருஅறுதிதேனானந்தம்அதில்நூறுகொண்டதுகற்பத்தில் அஸ்வமேதமுதலானதுகள் பண்ணியுண்ணிகபதத்தையடைந்த கர்மதேவனானந்தமதில்நூறுகொண்டதுவிராட்புருடானந்தம்அதில்நூறுகொண்டது சூத்திராத்மாவனந்தம் அதில்நூறுகொண்டது அந்தரியானந்தம் இந்தப்படிவாக்குக்குமனதிற்குமெட்டினஆனந்தம்பதினொன்றுஞ்சொல்லப்பட்டது வாக்குக்குமனதிற்குமெட்டாதஆத்மானந்தத்தை யடைந்த ஞானிக்குராகத்துவேஷாதிகளோடேகூடியிருக்கிறஇந்தப்பதினொருவானந்தத்தையும் நாய்க்கக்கினசோறுபோல்தோஷங்கண்டு வெறுத்தபடியினாலும்இத்தனையும இந்திரசாலமாய் காண்கையினாலும்இத்தனைபெயராயிருந்துபொசிக்கிறதும் நாமொருவன்றானேயென்கிற அனுசந்தானத்தினாலும் அவர்களைப்போல் கிறமமன்றியில்ஞானிக்குசகலபோகமுமொருமிக்கவந்தது இகலோகத்தைக் குறித்தும்மோட்சத்தைக்குறித்தும்நிறுத்தியமூன்றுவிதமுண்டென்றும் அதெல்லாம்ஞானிக்குத்தீர்ந்தமுறியாகப்பண்ணி முடிந்ததென்றும் அடையப்போகிறபுருஷார்த்தம் பிரமமென்றும்அது அபரோட்சஞானத்தினாலடைந்து வருப்பற்றதென்றும்இப்படியிருந்தநான்குவகையுந்திரிப்திதீபிகையில்வெட்டவெளியாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது அதையுங்கண்டுகொள்ளவேண்டும்

இப்படிவித்தியானந்தத்தை இந்தநிலைவருமளவும் அப்பியாசம் பண்ணிவருகிறவன் பிரமசொரூபமாவன்

வித்தியானந்தம்-முற்றிற்று





ஐந்தாவது

# விஷயானந்தம்.

வித்தியாரண்ணிய சுவாமிகள் பிரமானந்தத்தி லேகதேசமாய் பிரமானந்தத்திற்கு வழியாயிருக்கிற விஷையானந்தத்தைநிருபித்தருளுகின்றார்.

ச—கை விஷையா னந்தமாவதேது அதுஎந்தவிதத்தில் காணலாமெனில்

உ—ம் விருத்தியில் பிரதிவிம்பித்த வானந்தம் விஷையானந்தம் அதைவிவேகத்தினால் காணலாம்

ச—கை எல்லாவிருத்தியிலும் ஆனந்தமேன் பிரதிவிம்பிக்க இல்லையென்னில்

உ—ம் சலத்தில்பிரதி விம்பித்த சந்திரன்குழம்பினசலத்தில் சாமானியமாய்த்தோற்றுகிறது போலவும்நிர்மல சலத்தில் தெளிவாய் தோற்றுகிறதுபோலவுஞ் சிலவிருத்திகளில் ஆனந்தநதோற்றும் சிலவிருத்திகளில்தோற்றாது

ச—கை ஆனாலந்தக்கரண விருத்தியெத்தனைவிதம் அந்தவிருத்திக்கு லட்சணமேதென்னில்

உ—ம் அந்தக்கரணத்திற்குச் சாந்தவிருத்தியென்றும் கோரவிருத்தியென்றும் மூட விருத்தியென்றும் மூன்றுவிதமாயிருக்கும் அதில்வயிராக்கியம பொறுமையுதாரண காரணமுதலானது சாந்தவிருத்தி காமக்குரோதலோபமுதலானது கோரவிருத்தி மயக்கங்கலக்கம் பயமுதலானதுமூட விருத்தி

ச—கை பிரமம்இந்தவிருத்தியில் எப்படி பிரதிவிம்பிக்குமெனில்

உ—ம் கோரவிருத்தி மூடவிருத்தி இரண்டுங்கலங்கின விருத்தியானபடியினால் சித்துமாத்திரம் பிரதிவிம்பிக்குமே யல்லாமல் ஆனந்தப்பிரதிவிம்பிக்கமாட்டாது சாந்தவிருத்தி நிர்மலமானபடியினால் அதில்சித்தோடேகூடி ஆனந்தமும் பிரதிவிம்பிக்கும்

ச—கை இதற்குப்பிரமாண மேதென்னில்

உ—ம் கோரமூடவிருத்தியில் ஆனந்தமனுபவங் காணப்படவில்லைசாந்தவிருத்தியில் சுகாதி சயங்காணப்படுகிறது

ச—கை கோராதிவிருத்தியில் சுகானுபவமில்லையென்கிறதெப்படியென்னில்

உ—ம் விஷையத்தில் ஆசைமூளுகிறபோதே இது நமக்கு கிடைக்குமோ கிடையாதோவென்கிற துக்கங்கூடவருகையினாலும் கிடையாமற்போனால் துக்காதிகமானபடியினாலுங் கொடுத்தவன்பேரில் வயிரம்வளர்க்கையினாலும் அவனைநிக்கிரகிக்கக் கூடாவிட்டால் அழுகையாய் முடிகையினாலும் கோராதிவிருத்தியினால் துக்கமேயல்லாமல்சுகம்லேசமுமில்லை

ச—கை சாந்தவிருத்தியினால் சுகாதியமெப்படியென்னில்

உ—ம் காமியம்லபித்தவுடனே சாந்தமானவிருத்தியில் சுகம்பண்பிக்கிறதுபோகத்திலு விருத்திசாந்தமானபடியினால் சுகாதிசயந்தோறுகிறது இப்படிவிஷயங்களை த்ததற்குந் தககிலவனந்தம பிருத்திவிபபிக்கிறதுவிருத்தியில் ஆனந்தந்தோறறும் துகையினால் சாந்திவிருத்தியுளளவிடமெல்லாம ஆனந்தந்தோற்றுகிறதிலே சந்தேகந் தேவையில்லை

ச—கை இப்படிபிரதி விம்பிக்கிற பிரமத்திற்கு சுபாவமெத்தனைவிதம் பிறமத்திலிருக்கிற சத்திகதுகசுபாவ மெத்தனைவிதம் எந்தவுபாதியில் எந்தசுபாவங் காண்பிக்குமெனில்

உ—ம் சத்தென்றும் ஆனந்தமென்றும் பிரமத்திற்கு மூன்றுசுபாவமுண்டுமண்கல்லுமுதலான செடங்களில் சத்துமாத்திரந் தோற்றுமேயல்லாமல் மற்றவிரண்டுந்தோற்றாது கோரவிருத்தி மூடவிருத்திகளில் சத்துஞ்சித்துந்தோறறும ஆனந்தந்தோற்றாது சாந்தவிருத்தில் சச்சிதானந்த மூன்றுந்தோறறும

ச—கை மாயைக்குளத்தனை சுபாவமுண்டு எந்தச்சுபாவ மெதிலே தோற்றுமென்னில்

உ—ம அசத்தென்றுஞ் செடமென்றுந் துக்கமென்றும் மாயாசொரூபம் மூன்றுவிதமாயிருக்கும் அசத்து மனுஷக்கொம்பு முயற்கொம்புபோலேகாண்பிக்கும் மண்கலலு முதலானதுகளில் செடங்காண்பிக்கும் கோரமூடவிருத்தியில் துக்கங்காண்பிக்கும் சாந்தவிருத்தியில்செடமும்போகமுமிருக்கிறபடியினால் மாயையானந்தத்தோடே கலந்துகாண்பிக்கும்

ச—கை இப்படிதோற்றுகிற மாயாசொரூபங்களை யானந்தமாகக்காண்கிறதெப்படியென்னில்

உ—ம் அசத்தைமுயற்கொம்பு மனுஷக்கொம்புபோ லுபேட்சிக்கச் செடங்களை நாமரூபத்தைவிட்டுச் சத்துமாத்திரமாய்ப் பார்க்ககோரமூடவிருத்திகளைத் துக்கத்தைத்தள்ளி சத்துஞ்சித்துமாய்ப் பார்க்கச்சாந்தவிருத்திகளைச் சச்சிதானந்தமாய்க் காண்க இப்படி விஷையானந்தவழியே மூடனும் பிரமானந்தத்தை யடையலாம்

ச—கை மாயாரூபத்தை யிப்படிக்குத் துதித்தியானித்துகொண்டு பிரமானந்தமெப்படி கிடைக்குமென்னில

உ—ம் இந்தத்தியானத்தினால் சித்தமேகாக்கிரமானவுடனே ஆனந்தத்தைகிடைப்படும இந்தஆனந்த வித்தையில் பேதமாயிருக்கிற வுபாதிகளெல்லாந் துடைப்பட்டபடியினால் சச்சிதானந்தமேகாகாரமாகத்தோற்றும்

ச—கை பெந்தத்துக்க வுபாதிகளேது அதுஎதினால்துடைபடும் பிரமம்நிருபாதியாய்த் தோன்றுகிறதெதினாலென்னில்

௨—ம் சார்ந்தவிருத்தி கோரமூடவிருத்தி சிலைமுதலான செடங்களிதுக ளெல்லாம் பொர்தநுக்க வுபாதியோகத்தினலும் விவேகத்திலும்இந்த வுபாதிகளெல்லாந் தள்ளப்படும்பின்னர் திரிபுடியில்லாதபடியினல் நிருபாதியாயச் சுயம்பிரகாசமாயிருக்கிற பிரமத்துவமஅகண்டானந்த வடிவாய்த் தானகவேவிளங்கும்

இப்படிபிரமானந்தத்திற்கு வழிபாடாகவிஷையானந்தத்தைநிரூபித்தோம் இதைநிரந்தரம் அனுசந்தானம்பண்ணினவன் மோட்சத்தை யடைவன்

விஷையானந்தம்-முற்றிற்று



## பஞ்சதசப்பிரகரணம்.

முற்றிற்று

ஆ. பஞ்சகமூன்றுக்குப்பிரகரணம் (௰௫)



கடவுள்துணை.



## அட்டவணை.



அட்டவணை-முற்றிற்று.

